# 'டெபாசிட்தாரர்களுக்கு'

அன்பளிப்பு!

## வெள்ளிக்குத்து விளக்கு

ஒவ்வொரு ரூ. 5000/-ம் டெபாசிட்டுக்கும்

தங்கள் முதலீட்டிற்கு இதோ ஒரு பொன்னான வாய்ப்பு ...

## "சுபிட்சத்திற்கு வழிகாட்டி சுமங்கலி"

பெறுவீர் ரூ.10,000/- 48 மாதங்களில்

## "சுமங்கலி டெபாசிட் திட்டத்தில்"

தங்கள் முதலீடு ரூ.5000/- இரட்டிப்பாகிறது

கவர்ச்சிகரமான மாதாந்திர வட்டி வழங்கும்
விகிதங்களில் பிக்சட் டெபாசிட்டுகள் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன

| ஒரு வருடம் | இரண்டு வருடங்கள் | மூன்று வருடங்கள் |
|---|---|---|
| 16% | 17% | 18% |

குறைந்த டெபாசிட் ரூ.1000/- ஏற்றுக் கொள்ளப்படும்

## ஜெயசக்தி பைனான்சியர்ஸ்

(HIRE PURCHASE FINANCIERS)

39, நடேச ஐயர் தெரு (2வது மாடி)
(சிவா விஷ்ணு கோயில் அருகில்)
உஸ்மான் ரோடு, தி.நகர், சென்னை-600 017.
போன்: 447186

24/1-A, மார்கோசா ரோடு (10வது கிராஸ்) மல்லேஸ்வரம்.
பெங்களூர்-560 003 போன்: 24795

எண்: 2 & 3, முதல் மாடி, சி. எ. கஜூர் ரோடு,
தஞ்சாவூர் போன்: 1626

14/A, ஆனைக்கட்டி தெரு, திருவண்ணாமலை-606 601
போன்: 483

9-A, தம்பாசி தெரு, பட்டுக்கோட்டை, போன்: 453



C.A. BALOO .
. Managing Partner

CHARI

# எச்சரிக்கை!






**எழும்பூர் ரயில் நிலையத்துக்கு ரிசர்வேஷனுக்காகச் செல்பவர்களுக்கு:**

நீங்கள் எழும்பூர் ரயில் நிலையத்தில் நுழைந்ததுமே, ''ஸார்... உங்களுக்கு என்னிக்கு டிக்கட் வேணுமானாலும் வாங்கித் தர்றேன். ஒரு டிக்கட்டுக்குப் பத்து ருபா எக்ஸ்ட்ரா கொடுங்கள்...'' என்று கேட்கும் ஒரு கும்பல் உலாவுகிறது. அவர்களிடம் பணத்தைக் கொடுத்த சற்று நேரத்தில் உங்கள் கையில் பயண டிக்கெட்டும், ரிசர்வேஷன் டிக்கட்டும் வந்து சேர்ந்துவிடும். ஆனால் நீங்கள் பயணம் செய்ய முடியாது. காரணம், இந்தக் கும்பல் Waiting list டிக்கட் வாங்கி, Waiting list என்பதை W. L. என ரயில்வே நிர்வாகத்தினர் டிக்கட்டில் குறிப்பிடுவதால், 'W. L.'ஐ W. 4 எனத் திருத்தி, உங்களுக்காக 'W கம்பார்ட்மெண்டில் '4'வது இருக்கை, என ஏமாற்றி வருகிறார்கள்,



**அண்ணாசாலை நடைபாதையில் செல்வோர்க்கு:**

''சார்... உங்கள் செருப்பின் பட்டைகள் அறுந்து விடாமல் இருக்க ஆணி அடிக்க இருபது காசுதான் ஸார்....'' எனச் சிலர் குரல் கொடுக்க... செருப்பைக் கழற்றி நீங்கள் கொடுக்க... அவர்கள் இஷ்டம் போல் நம் செருப்புகளுக்கு பட்டன் ஆணிகளை அடிக்க, முடிவில் இருபது காசை நீங்கள் கொடுத்தால், 'எடுங்கள்... இரண்டு ரூபாயை'' என்பார்கள். காரணம் கேட்டா; ஒரு ஆணிக்குத்தான் இருபது பைசா உங்கள் செருப்பில் பத்து ஆணி அடித்திருக்கிறேன்'' என்ற விளக்கம் வரும்.



**ஆட்டோவில் செல்பவர்களுக்கு:**

மீட்டரின் தலை மிக லேசாகச் சாய்ந்திருந்தாலும் ஆட்டோவில் ஏறாதீர்கள். காரணம்... சற்று-தூரம் செல்வதற்குள் குறைந்த பட்சக் கட்டணத்தைத் தாண்டி மீட்டர் ஓடத் தொடங்கி விடும்,





**முட்டையைப்பச்சையாகக் குடிப்பவர்களுக்கு:**

கலப்படம் செய்ய இயலாத ஒரே உணவுப் பொருள் முட்டைதான் என்பார்கள். லெகான் கோழி முட்டை விலை குறைவு. நாட்டுக் கோழி முட்டை விலை அதிகம். இவ்விரண்டு முட்டைகளுக்கும் உள்ள வித்தியாசம் அதன் நிறங்கள்தான். முட்டையைப் பச்சையாகச் சாப்பிடுபவர்கள் நாட்டுக் கோழி முட்டையைத்தான் வாங்குவர்... சில கடைகளில் வெள்ளை நிறமுள்ள லெகான் முட்டைகளைக் கலர் சாயங்களின் அமிழ்த்தி அம்முட்டைகளுக்கு நாட்டு முட்டைகளைப் போன்ற வர்ணம் அளிக்கப்பட்டு விற்பனை செய்யப்படுகிறதாம்.

**பூக்கடை, பழக்கடைக்குச் செல்பவர்களுக்கு:**

பாரிமுனைப் பூக்கடைகளில் சில வேளையில் மல்லிகைப் பூக்களைப் பாலிதின் பைகளில் இட்டு அழகாக 'பேக்' செய்து விற்கிறார்கள். எடுத்துச் செல்லச் சுலபமாக இருக்கிறது என்பதற்காக அதை நீங்கள் வாங்கினால் வீட்டில் மனைவியிடம் திட்டு வாங்குவதற்கு உங்களைத் தயார் செய்து கொள்ள வேண்டும். காரணம்? வாசனையற்ற காட்டு மல்லிகைப் பூவை நீங்கள் முகர்ந்து பார்த்தால் வாங்கமாட்டீர்கள் என்பதற்காகத்தான் இந்தப் பாலிதின் பை. அதுபோல், தனித் தனியாக உதிர்ந்துபோன திராட்சைப் பழங்களை நம் தலையில் கட்டுவதற்கும் இத்தகைய பாலிதீன் பைகள் பயன்படுத்தப்படுகின்றன.

**சென்ட்ரல் அருகே நடைபாதையில் செல்வோருக்கு:**

அவசரமாகச் சென்று கொண்டிருக்கும் உங்களை ஊதுவத்தியின் வாசனை கவர்ந்திழுத்து நிற்கச் செய்யும். நடைபாதையில் நின்று கொண்டிருக்கும் சில வியாபாரிகளிடமிருந்து குறைந்த விலையில் இந்த ஊதுவத்திகளை வாங்கிச் சென்று வீட்டில் பற்றவைத்தால் வாசனைசிறிதும் வராது. சில துளி சென்டை வத்திப் பாக்கெட்டின் மீது தடவி நம்மை ஏமாற்றிய வியாபாரியின் தந்திரம் நமக்கு அப்போதுதான் புரியும்!

தகவல் - படம்: எம்.ஏ.எஸ்.

---




மணிமேகலை பிரசுரம் போர்டுடன் உள்ள வீட்டில், தந்தையும் தனயனும் எழுதிக் குவித்த புத்தகங்கள் காட்சிப் பொருளாய் இருக்க... லேனாத் தமிழ்வாணன் கறுப்புக் கண்ணாடியினூடே என்னைப் பார்த்தார்.

''சொல்வதைச்சுற்றி வளைக்காமல்சொல்ல வேண்டும். அடுத்த இதழுக்கான ஒரு பக்க அறிவுரை எழுத வேண்டும். காலத்தை வீணாக்கியவர்கள் உயர்வடைந்ததாக வரலாறே கிடையாது. நான் காட்டியின் ஒவ்வொரு சீட்டைக் கிழிக்கும்போதும் ஒரு நாள் கழிந்து விட்டதே என்பதை அறிவு பூர்வமாக....''

''சார் உங்களுக்கு ஆட்டோவில் விபத்து ஏற்பட்டதாமே... காயம் சேயம் ஒன்றுமில்லையே....''

''ரொம்பப் பழைய விஷயம் — பரவாயில்லை. என்னை ஆளாக்கிய திரு எஸ். ஏ. பி.யே துணை! தப்பித்து விட்டேன். பழைய விஷயமானாலும் நீ கேட்டது இங்கிதம். நல்ல வார்த்தைகள், நல்ல நண்பர்களிடையே உள்ள இடைவெளியைக் குறைக்கும். நல்ல வார்த்தையாலும் செயலாலும் இந்த இடைவெளியைக் குறைக்க முயல வேண்டும். இந்த இடைவெளியைக் குறைப்பதில் நாம் வெற்றிகண்டு விடுவோமேயானால்....''

''உங்கள் 'கல்கண்டை' வாரா வாரம் கடிக்கிறவன் நான்.''

''என்ன சொன்னாய்?''

''....மன்னிக்கவும்... படிக்கிறவன் நான். எப்போதும் யோசித்துக் கொண்டிருப்பீர்களோ?''

''யோசனை... ஆமாம். மனிதனது மூளை ஒரு நல்ல தோட்டம் போன்றது. அதில் அழகூட்டும் மலர்களை — நல்லெண்ணங்களை வளர்க்கலாம். புல்லையும் பூண்டையும் காட்டுச் செடியையும்....''

நிறையக் கேட்டுக்கொண்டு வாசலுக்கு வந்தேன். அந்த வழியே செல்லும் பத்தாம் நெம்பர் பல்லவனில் பாய்ந்தேன்.

வள்ளென்று விழுந்தார் கண்டக்டர்.: ''மாடு—மாதிரி ஏர்றியே... தலையி லேன்ன மசாலாவா இருக்கு?... நின்னப்புறம்தான் ஏறேன் சாவுகிராக்கி....''

வேணுயிஸம் கைகொடுத்தது: ''...இதோ பாருங்கள்... பணிவாய்ப் பேசுங்கள். பழுகுங்கள். கன்னிப் பெண் குதித்து நடக்கிறாள். கர்ப்பிணிப் பெண் கனிவாய் நடக்கிறாள். சூல் கொள்ளாத நெற் பயிர் விரைத்து நிற்கிறது. முற்றிய நெற் பயிர் சாய்ந்து கிடக்கிறது. எடையுள்ள விமானம்தான் உயர்ந்து பறக்கும். பணிவுள்ள மனிதன் தான் உயர்வை....''

பல்லவன் பயணிகள் என்னை ஒரு மாதிரியாகப் பார்த்தார்கள்.

''ஹோல்டான்! ஃபுல்லா போட்டுக்கினு வந்துட்டான் சாவுக்கிராக்கி இறங்குய்யா!'' என்றார் கண்டக்டர்.

''எதையும் இடம் பொருள் ஏவல் அறிந்து பேசவேண்டும். பசித்தவனுக்குத்தான்விருந்து படைக்கலாம்; பசி இல்லாதவனுக்கு ஜிஞ்சர் பீர்தான் தரவேண்டும்...'' வேணுயிஸம் இப்போது மனசுக்குள் செயல்பட்டது.

# நீங்கள் 1952 க்கு முன்னால் பிறந்தவராயின், இந்த விளம்பரம் முழுவதையும் படியுங்கள்–



## 30 வயதுக்கு மேற்பட்டவர்களில் 10–ல் 9 பேர்களின் கேசம் உதிர்கிறது ...அவர்களுக்கு அது தெரியாது!

**அந்த 9 பேர்களில் நீங்களும் ஒருவராக இருந்தால், இன்றே ப்யூர் ஸில்விக்ரின் உபயோகிக்கத் துவங்குங்கள்.**

உங்கள் தலைமுடியை, சீப்பினால் அழுத்தப் படிய வாரிவிடவும். உங்கள் சீப்பில், வாரிய கையோடு, தலைமுடியும் கூடவே வந்தால், உங்கள் தலைமுடி உதிரத் துவங்கிவிட்டது என்று சொல்லலாம். முகம் பார்க்கும் கண்ணாடியின் முன் உதிர்ந்த கேசம் தென்படத் துவங்குமுன்னர் இப்பொழுதே செயல்படவும். கேசத்துக்குத் தேவைப்படும், மிக முக்கியமான அமினோ-அமிலங்கள் இல்லாத காரணத்தினால், தலைமுடி உதிர்கிறது; ஆரோக்கியத்தை இழக்கிறது. இந்தக் குறைபாடு சரிசெய்யப் பட்டால் அன்றி, தலைமுடி உதிருவது தொடர்ந்து நீடிக்கவே செய்யும். அதனால்தான், இன்றே ப்யூர் ஸில்விக்ரினை, நீங்கள் உபயோகிக்க வேண்டியது அவசியமாகும்.




**ப்யூர் ஸில்விக்ரினில் அடங்கியுள்ளவை யாவை?**

(1) ப்யூர் ஸில்விக்ரினின் ஒரு சொட்டு பெரிதாக்கிக் காட்டப்பட்டுள்ளது. ப்யூர் ஸில்விக்ரின் இணையற்றது. 17 அமினோ-அமிலங்களின் இந்தக் கலவை, இயற்கையான கேச எண்ணெய் உடலுக்கு ஊட்டப்படுவதை ஈடு செய்கிறது.

**ப்யூர் ஸில்விக்ரின் செயல்படும் முறை:**

(2) நன்கு உள்ளே ஆழப் பாய்ந்து செயல்படுகிறது. கேசத்தின் வேர்களை எட்டும் வகையில், ப்யூர் ஸில்விக்ரினினால் தலையை நன்கு அழுந்த நீவிவிடவும். விஞ்ஞான ரீதியிலான ஆராய்ச்சிகளின் மூலம் தயாரிக்கப்பட்டுள்ள ப்யூர் ஸில்விக்ரின், இப்பொழுது செயல்படத் துவங்குகிறது; தலைமுடி வளர்ச்சியை, ஆரோக்கியமான விதத்தில், மறுபடியும் ஏற்படுத்த, இது உதவுகிறது. உங்கள் தலைமுடி வழக்கமான நிலைக்கு வரும்வரை, ப்யூர் ஸில்விக்ரினை ஒவ்வொரு நாளும், இருமுறை பயன்படுத்துங்கள்.

**ப்யூர் ஸில்விக்ரின்**




OBM/5849 Tam.

# "நம்பிக்கைத் துரோகத்துக்கு ஆளானேன்!"

சென்னை பொது மருத்துவ மனையில் இருதய நோய்க்காகச் சிகிச்சை பெற்றுக்கொண்டிருக்கிறார் தமிழக விவசாயிகள் சங்கத் தலைவர் நாராயணசாமி நாயுடு. பத்து நிமிடங்களுக்குமேல் தொடர்ந்து பேசக் கூடாது என்று டாக்டர்கள் தடை விதித்திருந்தும்கூட கல்கிக்காக இரண்டுமணி நேரம் பேட்டியளித்தார். பேட்டியிலிருந்து.....



கேள்வி: விவசாயிகள் வாங்கிய கடனைத் திருப்பித் தருவதுதானே முறை?

பதில்: கடனைத் திருப்பித் தரவேண்டியது தான் ஒப்புக்கொள்கிறேன். ஆனால் விவசாயியைக் கடன் வாங்கும் வழக்கத்துக்கு அடிமையாக்கியது அரசாங்கம்தான். 1947ல் இருந்து ஐந்தாண்டு காலம் வரை இந்திய அரசு அரிசி போன்ற அத்தியாவசியப் பொருட்களை இறக்குமதி செய்து கொண்டிருந்தது. அந்நியச்செலாவணி ஏகமாய் ஆனது. அந்தச் சமயத்தில்தான் அரசாங்கம் விவசாயிகளிடத்தில் 'அரசாங்கப் பணம் பெற்றுக் கொண்டு மேலும் உற்பத்தியைப் பெருக்குங்கள்' என்றது. கூப்பிட்டுக் கூப்பிட்டுக் கடன் கொடுத்தது. அதுவரை தனது குடும்பத்துக்கும், சற்று உபரியுமாகப் பயிர் செய்து வந்த விவசாயி கடனைப் பெற்று நிறைய உற்பத்தி செய்ததால்தான் இந்தியா தன்னிறைவு பெற்று இறக்குமதியை நிறுத்தியது. தன்னிறைவு பெற வேண்டும் என்ற நிலை வந்தபோது கூப்பிட்டுக் கடன் கொடுத்த அரசு (எந்தக் கட்சி அரசானாலும் சரி) கடனை அடைக்க முடியாமல் விவசாயி கஷ்டப்படும்போது அதைத் தள்ளுபடி செய்யாமல் இருப்பது ஏன்?

கேள்வி: 1979ல் இருந்து சுமார் 200 கோடி ரூபாய்க் கடனைத் தள்ளுபடி செய்திருக்கிறது அ. தி.மு.க. அரசு. அப்படியிருக்க எம். ஜி. ஆர். அரசு விவசாயிகளுக்கு ஒன்றுமே செய்யவில்லை என்பதில் என்ன நியாயம் இருக்கிறது?

பதில்: அரசாங்கம் கொடுத்த புள்ளி விவரங்களை வைத்துப் பேசுகிறீர்கள் போலிருக்கிறது. இந்தப் புள்ளி விவரங்கள் பேப்பரில்தான் இருக்கின்றன. ஐந்து ஏக்கருக்கும் குறைவாக வைத்துள்ள விவசாயியின் நிலம், புயல், வெள்ளம் போன்ற வற்றினால் பாதிக்கப்பட்டால், அந்த விவசாயியின் கடனைத் தள்ளுபடி செய்தது அரசு. அப்படித் தள்ளுபடி செய்த தொகை 50 கோடி இருக்கும். தக்காவிக் கடன் என்ற ''வராக் கடனை'' தள்ளுபடி செய்ய அரசு கஜானாவிலிருந்து ஒன்றும் செலவாகவில்லை. ஒவ்வொரு கூட்டுறவு வங்கி, மற்றும் நிலவள வங்கியும் வராக் கடனை ஈடு செய்வதற்காக ஒரு தொகையை வைத்திருக்கும். அதை வைத்து வராக் கடனை ஈடு செய்யும். காமராஜ், கருணாநிதி காலத்திலிருந்து இது மாதிரி நிறையத் தொகை தள்ளுபடி செய்யப்பட்டிருக்கிறது. அவர்கள் காலத்தில் தள்ளுபடி செய்த தொகையெல்லாம் இவர் காலத்தில் செய்தது போன்று விளம்பரம் செய்துகொள்கிறார். மறுபடியும் கடன் தருவதற்காக அரசு, கூட்டுறவு வங்கிக்கு 80 கோடி ரூபாய் கொடுத்திருக்கிறதாம். இந்தப் பணத்தை விவசாயிக்குக்கொடுத்து அவனை மேலும் கடனாளியாக்காமல் அரசே, நிலங்களை எடுத்துக்

கொண்டுபயிர்செய்து கொள்ளட்டும். அரசு கடனும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம்.

**கேள்வி:** மற்ற மாநிலங்களை ஒப்பிடும்போது தமிழ்நாட்டில் தான் விவசாயிகளுக்கு மின்சாரக் கட்டணம் குறைவு. அதைக் கூடக் கட்ட முடியாது என்று சொல்வது சரியா?

**பதில்:** சிறு விவசாயிகளுக்கு யூனிட்டுக்கு 12 பைசாவும்பெரியவிவசாயிகளுக்கு 15பைசா வும் வசூலிக்கிறார்கள். அணைக்கட்டுப் பாச னம், கிணற்றுப் பாசனம் என்று இருக் கிறது. அணைக்கட்டுப் பாசனத்தில் பயி ரிடும் ஒரு விவசாயி ஆறு மாதத்தில் ஒரு ஏக்கரில் ஒரு போகம் பயிரிடுவதற்கு ரூ. 60தான் பாசன வரியாகச் செலுத்து கிறார். ஆனால் கிணற்றுப் பாசனம் செய் யும் விவசாயி, அதே கால கட்டத்தில், கிட்டத்தட்ட 600 ரூபாய் மின்சாரக் கட் டணம் செலுத்துகிறான். இத்தனைக்கும் கடன் வாங்கி, ஆழ் கிணறு வெட்டி, இரண்டு மோட்டார்வைத்துத் தண்ணீர் எடுக்க வேண்டியிருக்கிறது. பம்பு செட் வைத்துள்ள விவசாயி flat rate ஆக ஒரு கட்டணம் செலுத்த வகை செய்து கொடுங்கள் என்று கேட்கிறேன். அதா வது, ஒரு குதிரை சக்தி கொண்ட மோட் டார் வைத்திருப்பவருக்கு ஒரு மாதத் துக்கு 50 ரூபாய் கட்டினால் போதும் என்ற திட்டத்தைக் கொண்டு வாருங்கள். இதே திட்டத்தைக் கர்நாடக முதல்வர் குண்டு ராவிடம் சொன்னேன். அதை உடனே ஏற்று உத்தரவு போட்டார். மோட்டார் வைத்துக் கொண்டு 'உப யோகப்படுத்தாதவன் கூடமின்சாரக் கட் டணம் flat rateல் கட்டவேண்டியதாயிற்று கர்நாடகத்தில். அதே மாதிரிஇங்குசெய்வ தில் எனக்கு ஆட்சேபமில்லை. இல்லையென் றால் பெரிய விவசாயி, சிறு விவசாயி என்று பார்க்காமல் எல்லோருக்கும் யூனிட் ஒன்றுக்கு 12 பைசா வசூலித்துக் கொள் ளட்டும். ஆனால் இந்த flat rate முறையை அமல்படுத்தினால் நான் மகிழ்ச்சி யடைவேன்.

**கேள்வி:** விளைபொருட்களுக்கான விலையை நிர்ணயிப்பது மத்திய அரசு. அப்படி யிருக்க அதை எதிர்த்துப் போராடாமல், மாநில அரசை எதிர்க்கிறீர்களே?

**பதில்:** 1976ல் விளை பொருட்களுக்கான விலையை நிர்ணயம் செய்யும் கமிஷனில் நிலைமையைச் சொல்லி அரிசி, பருத்தி, கரும்பு, நிலக்கடலை போன்றவற்றுக்கு விலையை ஏற்றச் சொன்னேன். அதேமாதிரி 1977ல் பிரதமரைச் சந்தித்து மனுவும் கொடுத்துள்ளேன். அகில இந்திய அள வில் இதற்கான போராட்டம் நடந்து கொண்டிருக்கிறது. உற்பத்தி செய்வதற் கான மூலப் பொருட்களின் விலை 375 சதம் உயர்ந்திருக்கிறது. அதே சமயம் கொள்முதல் விலை 200 சதம்தான் உயர்ந் திருக்கிறது. கிட்டத்தட்ட 175 சதம் துண்டு விழுகிறது. இதனால்தான் பெரும் பாலான விவசாயிகள் கடனைக் கட்ட முடி யாமல் கஷ்டப்படுகின்றனர். நெல்லுக்கு குவிண்டாலுக்கு 175 ரூபாய் கொடுக்க வேண்டும் என்று போராடி வருகிறோம். ஆனால் பருத்தி, கரும்பு, நிலக்கடலை போன்றவற்றுக்கு மாநில அரசு ஈடுகட்டும் விலையை(support prize,) நிர்ணயித்தால் துண்டுவிழும் தொகையைச் சரிப்படுத்த முடியும். இதை மாநில அரசு செய்யமுடி யும். எங்களுக்கு மத்தியஅரசு, மாநிலஅரசு என்றெல்லாம் கிடையாது. எங்கள் கோரிக்கை நிறைவேற எந்த அரசானாலும் போராடுவோம்.

**கேள்வி:** விவசாயிகளுக்கு நன்மை செய் வதற்காக ஏற்படுத்தப்பட்ட உயர்மட்டக் குழுவில் சேராதது ஏன்?

**பதில்:** இந்த உயர் மட்டக் குழு ஒன்றும் சாதித்துவிடப் போவதில்லை. கால விரயம் செய்வதற்குத்தான் இது பயன்படும். 1977ல் நான் சொல்லித்தான் இந்தக் குழுவே அமைக்கப்பட்டது. மூன்று கூட் டங்களில் நான் கலந்து கொண்டிருக்கி றேன். ஆனால் அந்தக் குழு ஒரு முடிவுக்கு வருமுன், ஜப்தி போன்ற கொடுமைகள் செய்யப்பட்டதால் அதிலிருந்து ராஜினாமா செய்து விட்டேன். சமீபத்தில் கூட எம்.ஜி. ஆர். 'உயர்மட்டக்குழுவின் பரிந்துரையை ஏற்றுத்தான் ஆக வேண்டும் என்ற கட்



டாயம் அரசுக்கு இல்லை'' என்று கூறியுள்ளார். அப்புறம் இந்த உயர் மட்டக் குழு எதற்கு? ஊர் சுற்றிப் பார்த்து, மக்கள் பணத்தை விரயப்படுத்தவா?

கேள்வி: 'எம்.ஜி. ஆரை விரட்டுவதே என் வேலை' என்று அரசியல்வாதிகள் போல் பேசியிருக்கிறீர்கள்! எம்.ஜி. ஆர். மேல் ஏன் இவ்வளவு ஆத்திரம்?

(இந்தக் கேள்வி கேட்டதும் நாயுடு சற்று உயர்ந்த குரலுடன் நிமிர்ந்து உட்கார்ந்து ஆவேசத்துடன் பேச ஆரம்பித்தார்.)

பதில்: நம்பிக்கை துரோகம்தான் காரணம். 1980ல் சட்ட மன்றத் தேர்தல் நடப்பதற்கு முன் என் கிராமத்துக்கு இரண்டு முறை வந்து என்னைச் சந்தித்தார். 'நாயுடு நடந்தது நடந்து விட்டது. தயவு செய்து சட்ட மன்றத் தேர்தலில் உங்கள் சங்கம் நடுநிலைமை வகிக்க வேண்டும். நான் ஆட்சிக்கு வந்து விட்டால், நீங்கள் கேட்கும் கோரிக்கைகளை யெல்லாம் கண்டிப்பாக நிறைவேற்றுவேன்' என்றார். எனக்கு அப்போது சற்று நம்பிக்கை வந்தது. அந்தச் சமயமே என்னிடம் சொன்னார், மது விலக்கை ரத்து செய்யப் போவதாகவும் அதன் மூலம் வரும் வருமானத்தில் மொத்தம் உள்ள 260 கோடிரூபாய்க் கடனுடன், நகைக் கடன்கள் 65 கோடியையும்சேர்த்து 325 கோடியை ரிசர்வ் பாங்கு, மத்திய அரசு எதிர்த்தாலும் தள்ளுபடி செய்கிறேன் என்று கூறி என் வீட்டில் சாப்பிட்டுவிட்டுச் சென்றார். பிறகு பெங்களூரில் நான் ஓய்வெடுத்துக் கொண்டிருக்கும்போது மீண்டும் வந்தார். விவசாயிகளுக்குத் தர வேண்டிய தேர்தல் வாக்குறுதிகளை என் பார்வைக்குக்கொண்டு வந்தார். அதில் ஏழு வருடத்தில் விவசாயிகள் கடனைப் படிப்படியாகத் தள்ளுபடி செய்வோம் என்றிருந்தது. 'என்ன சார், உங்க பதவிக்காலமே ஐந்து ஆண்டுதானே' என்று நான் சொன்னவுடன், அதை ஐந்து ஆண்டுகள் என்று திருத்தினார். மிக வெளிப்படையாகச் சொல்லப் போனால் அவரது கெஞ்சும் பேச்சுக்களினாலும், நடத்தையாலும் என்னைக் கவர்ந்துவிட்டார் என்றே சொல்ல வேண்டும். என்னை நம்பி எங்கள் சங்கத்தினர் நடுநிலைமை வகிக்கவேதான் இவர் பதவிக்கு வர முடிந்தது. பதவி ஏற்ற பின், இதுவரை ஒரு முறை கூட அவரைச் சந்திக்கும் சந்தர்ப்பம் ஏற்படவில்லை. 1981ல் தேசிய பாதுகாப்புச்சட்டத்தின்படி என்னைக்கைது செய்தார். எங்கள் சங்கத்தை நசுக்க ஏகப்பட்ட அடக்குமுறைகள். சங்கத்தில் பிளவுகளை ஏற்படுத்தினார். ஓட்டன்சத்திரத்தில் இருந்த எங்கள் சங்கக் கட்டிடத்தை இடிக்கச் சொன்னார். சுருக்கமாகச் சொன்னால் நாராயணசாமி நாயுடு என்னும் மனிதனும், தமிழக விவசாயிகள் சங்கமும் ஒழிக்கப்பட வேண்டும் என்பதற்கு என்னென்ன செய்ய வேண்டுமோ அத்தனையும் செய்தார்; செய்து கொண்டிருக்கிறார்.

கேள்வி: ஐந்து வருடத்தில் கடனைத் தள்ளுபடி செய்வதாக எம்.ஜி.ஆர். கூறியதாகச் சொல்கிறீர்கள்; எந்த விதத்தில் அதைச் செய்வதாகச் சொன்னார்?.

பதில்: இப்பொழுது ஆரம்பத்தில் உங்களிடம் சொன்ன பிரச்னைகளையே அவரிடமும் சொன்னேன். என்னிடமே எந்த விதத்தில் இதைச் செய்வது என்று கேட்டார். ஐந்து ஏக்கருக்குக் குறைவாக உள்ள விவசாயிகளுக்குக் கடனை முழுவதுமாகவும், ஐந்திலிருந்து பத்து ஏக்கர் வரை வைத்துள்ள விவசாயிகளுக்கு அசலில் பாதியையும் வட்டி அபராத வட்டியையும், 10 ஏக்கரிலிருந்து பதினைந்து ஏக்கர் வரை வைத்திருக்கும் விவசாயிகளுக்கு வட்டியையும், அபராத வட்டி




''தம்பி! இது என்ன?''

''அண்ணே! இது ஒரு கிராமம்.''

''ஏன் எல்லோரும் கண்ணாடி அணிந்திருக்கிறார்கள்?''

''அரசாங்கத்தின் கண்ணொளி வழங்கும் திட்டத்தின் மூலம் கண்ணாடி அணிந்திருக்கிறார்கள்.''

''ஏன் எல்லோரும் சிரிக்கிறார்கள்?''

''அடுத்தபடியாக அவர்களுக்குப் பல்பொடி கிடைக்கப் போகிறது. எனவே சிரிக்கிறார்கள்.''

''வேறு என்ன எதிர்பார்க்கிறார்கள்?''

''இப்படியே கண், பல், கழுத்து, மார்பு என்று இறங்கி வந்து ஒரு நாள் நம் வயிற்றையும் அரசாங்கம் கவனிக்கும் என்று நம்புகிறார்கள்.''

-628

யையும் தன்னுபடி செய்யுங்கள் என்று கூறினேன். ''நான் ஆட்சிக்கு வந்தால் நீங்கள்தான் முதல்வர் மாதிரி'' என்றெல்லாம் போலிச் சொற்களைப் பேசிய பின், இப்பொழுது வாக்குறுதிகளையும் நிறைவேற்றாமல், ஜப்தி போன்ற கடும் நடவடிக்கையில் இறங்கி விட்டார். இப்பொழுது கூட ஒன்றும் குடிமுழுகிப்போய் விடவில்லை. நேரில் சந்தித்துப் பேசினால், பிரச்னைகளைத் தீர்ப்பதற்கு வாய்ப்பு இருக்கிறது. ஆனால் என்னைச் சந்திப்பதை அவர் விரும்பவில்லை என்று தோன்றுகிறது.

**கேள்வி:** விவசாயிகள் பிரச்னையில் கருணாநிதி எம். ஜி. ஆர். அணுகுமுறை பற்றிச் சொல்ல முடியுமா?

**பதில்:** 1971, 1972, 1973ல் கருணாநிதி பதவிக் காலத்தில் நாங்கள் போராட்டம் நடத்தி யிருக்கிறோம். ஒவ்வொரு முறை போராட்டம் முடிந்ததும் பேச்சு வார்த்தைக்கு அழைக்கும் முன், கைதான விவசாயிகளை விடுதலை செய்துவிட்டுத்தான் பேச்சு வார்த்தை ஆரம்பமாகும். ஆனால் எம். ஜி. ஆர். அப்படி இல்லை. வன்முறையில் இறங்கினார்கள். அது இது என்று சாக்குப் போக்குக் காட்டிக் கைதான விவசாயிகளை விடவே மாட்டார். என் மீது கொலை வழக்கே போட்டார். எம். ஜி. ஆரைப் போன்று போலி வாக்குறுதி கருணாநிதி கொடுத்ததில்லை. 1980 சட்ட மன்றத் தேர்தலின்போது கருணாநிதியும் என்னை ஒரு முறை சந்தித்தார். அவர், ''நாயுடு, நாங்கள் பதவிக்கு வந்தால் எங்களால் எந்த அளவுக்கு நன்மை செய்ய முடியுமோ அந்தஅளவுக்குச் செய்கிறோம்'' என்றுதான் சொன்னார். கருணாநிதி பதவிக் காலத்தில் அவரைப் பருத்திக்கு ஈடுகட்டக் கூடியவிலையை(Support price)அரசுகொடுக்கப்போகிறது என்று அறிவிக்கச் சொன்னேன். அதே மாதிரி சொன்னதுதான் தாமதம். கோயமுத்தூரில் உள்ள 82 மில்காரர்களும் போட்டி போட்டுக் கொண்டு பருத்தியைக் கொள்முதல் செய்தனர். இந்த மாதிரிச்சில விஷயங்களைத் தைரியமாகச்செய்வார் கருணாநிதி. ஆனால் எம். ஜி. ஆரோ 1981ல் நான் திருச்சியில் தங்கியிருந்தபோது 'சந்திக்கவும்' என்று தந்தியடித்துவிட்டு, 'நான் தந்தி அடிக்கவில்லையே' என்று இரட்டை வேடம் போட்டவர்.

**கேள்வி:** தமிழக விவசாயிகள் சங்கத்தின் எதிர்காலக் கோரிக்கைகள் என்ன?

**பதில்:** முதலில் உற்பத்தி செய்பவனுக்கும் கொள்முதல் செய்பவருக்கும் இடையில் உள்ள தரகர்களை ஒழிக்க வேண்டும். ஒவ்வொருவருக்கும் பதினைந்து ஸ்டாண்டர்ட் ஏக்கர் நிலம் வைத்துக் கொள்வதை அனுமதித்துவிட்டு, மீதியை நிலமற்றோருக்குப் பகிர்ந்து கொடுக்க வேண்டும். இந்தியாவில் பதினைந்து ஸ்டாண்டர்ட் ஏக்கரின் மதிப்பு இரண்டு லட்சம்தான். யாருமே இரண்டு லட்சத்துக்கு மேல் சொத்து வைத்துக்கொள்ளக் கூடாது என்பதும் சங்கத்தின் கோரிக்கைகளில் ஒன்று.

-பேட்டி: ப்ரியன்
-படங்கள்: ஜெய்மோகன்

---

● இரண்டு குழந்தைகளுக்கு மேல் பெறும் தம்பதியர் தங்கள் வருமானத்தில் பத்தில் ஒரு பங்கை அடுத்துப் பெறும் குழந்தைகளுக்காக அபராதமாகச் செலுத்த வேண்டும் என்று சீனாவில் புதியதொரு சட்டம் கொண்டு வரப்பட்டிருக்கிறது. பதினாறு குழந்தைகள் வரை இந்த அபராதம் நீடிக்கும். அதே சமயத்தில் ஒரு குழந்தை மட்டும் பெற்றுக் கொள்கிறோம் என்று உத்தரவாதம் அளித்தால் மாதந்தோறும் சுமார் மூன்றரை டாலர் சன்மானம் அளிக்கப்படுவதோடு அக்குழந்தை பள்ளியில் சேர முதல் உரிமையும் கொடுக்கப்படும். அதே போல் குழந்தையற்றவர்களுக்கும் பிறந்து, இறந்துவிட்ட குழந்தைகளின் தாய் தந்தையருக்கும் அதிக விகிதத்தில் பென்ஷன் கொடுக்கப்படும். கடந்த வருஷம் முதல் இச்சட்டம் சீனாவின் மிகப் பெரிய நகரமான ஷாங்காயில் அமுலாக்கப் பட்டிருக்கிறது.

–டெக்கான் ஹெரால்டிலிருந்து





● அமெரிக்காவில் ராபர்ட் ஆர்பன் என்ற நகைச்சுவைத் துணுக்கு எழுத்தாளர் பெரும்பாலும் பத்திரிகைகளுக்காகத் துணுக்குகளை எழுதுவதில்லை என்றாலும் தாம் கலந்து கொள்ளும் பார்ட்டிகளிலோ, தலைமை உரைகளிலோ, பொதுக் கூட்டங்களிலோ பேசும் போது சர்வ சாதாரணமாக நகைச் சுவைத் துணுக்குகளைச் சொந்தக் கற்பனையில் கூறுவாராம். ஒரு நாளைக்குக் குறைந்தது 25 துணுக்குகளாவது இவரிடமிருந்து பிறக்கும். மிகப் பெரிய தலைவர்கள், அரசியல் வாதிகள் தங்களுடைய பேச்சுக்களின் இடையில் சொல்வதற்காக இவரிடமிருந்து நகைச் சுவைத் துணுக்குகளைக் கேட்டுப் பெறுவதுண்டு. இதன் மூலமாகவே இவருக்கு வருடத்திற்கு 1,25,000 டாலர் வருமானம் கிடைக்கிறதாம்.

வீக் எண்டிலிருந்து
அ. குமார்

# அட ராமச்சந்திரா!



ஆமை புகுந்த வீடும் அமீனா புகுந்த வீடும் உருப்படாது
—பழமொழி

அரசு நடத்தும் தொழிலகமும் சர்க்கார் நடத்தும் வியாபாரமும் உருப்படாது
—புதுமொழி

இந்திய உணவு கார்ப்பரேஷன் என்பதாக மத்திய அரசாங்க நிறுவனம். நாடுமுழுவதும் உணவுதானியக் கொள்முதல் செய்து, சேமித்துவைத்து, விநியோகிக்கிறது. இதனால் (1) விவசாயிகளுக்கு நியாயவிலை கிடைக்கும்; (2) இடைத்தரகர்கள் ஒழிவார்கள்; (3) விலைவாசிகள் ஸ்திரப்படும்; எனவே மக்களுக்கு நன்மை — இது அரசின் லட்சியம்!

நடைமுறையிலோ...?

விவசாயிக்கு நியாயவிலை கிடைப்பதில்லை. அரசு, தான் நிர்ணயித்த விலைக்குக் கட்டாயக் கொள்முதல் செய்கிறது. கூடவே கிளர்ச்சி, போராட்டங்களுக்கு வழிவகுக்கிறது. இடைத்தரகர்கள் இல்லாமல் போய்விடவில்லை. கார்ப்பரேஷனே கொள்முதலுக்கு மொத்த வியாபாரிகளைப் பெரிதும் நம்புகிறது. உணவுப் பண்டங்களின் விலை ஸ்திரப்படவில்லை; உயர்ந்து கொண்டேதான் போகிறது.

சில காலம் முன்பாக மாவுமில்களுக்குச் சிக்குப் பிடித்த பழைய தானியங்களைத் 'தள்ளி' விட்டது கார்ப்பரேஷன். வினை இந்தத் தானியங்களை வாங்கினால்தான் நல்ல தானியமும் தரமுடியும் என்று கண்டிஷன் போட்டது. எல்லா தானியத்தையும் ஒன்றாய்க் கலந்து அரைத்து மாவாக்கி விட்டால் சிக்குப்பிடித்ததென்று யாருக்குத்தெரியப்போகிறது? இப்படிபோகிறது சிந்தனை! மக்களின் வயிற்றுக் கடுப்பு பற்றி கார்ப்பரேஷன் கவலைப்பட முடியுமா? மருத்துவ மனைகள் எதற்கு இருக்கின்றன?

இப்போது இன்னொரு செய்தி வந்திருக்கிறது. கார்ப்பரேஷன் உணவு தானியங்களைப் பாதுகாப்பதிலும் ஓரிடத்திலிருந்து இன்னொரு இடத்துக்குக் கொண்டு செல்வதிலும் ஏற்படும் நஷ்டம் மூன்று ஆண்டுகளில் இரட்டிப்பாகியிருக்கிறது! கிடங்கில் சேமித்து வைத்திருக்கும் போது ஏற்படும் நஷ்டம் நாற்பது சதம். (திருட்டுப்போதல், புழுத்துப்போதல், எலி தின்பது போன்றவை) ஓரிடத்திலிருந்து இன்னோர் இடத்துக்குக் கொண்டு செல்லும்போது ஏற்படும் நஷ்டம் அறுபது சதம்! (திருட்டு, மோசடிவேலைகள், அஜாக்கிரதை ஆகியன.)

உணவு கார்ப்பரேஷன் தலைவர் பா. ராமச்சந்திரன் ரொம்பவும் கவலைப்பட்டு கார்ப்பரேஷன் அதிகாரிகளுக்குச் சுற்றறிக்கை அனுப்பியுள்ளார். 'மோசடிகளைத் தவிர்க்க மூட்டை சரியாக நிரப்பப்படுகிறதா; முறையாக எண்ணப்படுகிறதா; நேர்மையாக எடை போடப்படுகிறதா கவனியுங்கள். சிந்திவீணாவதையும் திருட்டையும் தவிர்க்க மூட்டைக்குப் போதிய அளவு தையல் போடப்படுகிறதா பாருங்கள். திடீர் சோதனை செய்யுங்கள். விழிப்புடன் இருங்கள்' என்றெல்லாம் மன்றாடிக் கேட்டுக் கொள்கிறது சுற்றறிக்கை.

தனியார் துறையில் வியாபாரம் நடந்தால் தானியங்களைச் சேமித்துப் பாதுகாப்பதிலும் இடம்விட்டு இடம் கொண்டு செல்வதிலும் மிகுந்த எச்சரிக்கையுடன் இருப்பார்கள். காரணம் அது தனி நபர்களின் லாப நஷ்டப் பிரச்னை. ஆனால் உணவு கார்ப்பரேஷன் கணக்கில் நஷ்டமென்றாலும் தானியங்களின் இழப்பு என்றாலும் நஷ்டம் பொதுமக்களுக்குத்தான். அதிகாரிகளுக்கும் ஊழியர்களுக்கும் மாதம் பிறந்தால் சம்பளம். எனவே அசிரத்தை. சிலரின் லஞ்ச ஊழல் மோசடிகளைத் தட்டிக் கேட்கப் பிறருக்கு அச்சம். (நமக்கேன் வம்பு?) ஒட்டு மொத்தமாய் அனைவருக்கும் கெட்ட பெயர்.

பாவம் பா. ரா., ஒரு சுற்றறிக்கை அனுப்பிவிட்டால் நிலைமை சீர்திருந்தி விடும் என்று நம்பிக் கொண்டிருக்கிறார்!

கல்கி
1982 மே 16
துந்துபி வைகாசி 2
மலர்: 40 இதழ்: 42
தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்



# ரவிகுல திலகன்

## செம்பியன்

### 18

மூத்தரையர் ஆட்சியில் முக்கிய நகரமாக விளங்கிய தஞ்சாவூரிலிருந்து தலைநகர் சந்திரலேகை செல்லும் சாலை அகன்றதாகவும், அதிகமான போக்கு வரத்தை ஏற்கத் தக்க விதத்தில் உறுதியாகவும் அமைந்திருந்தது. ராஜபாட்டையாயினும் அராபிய வியாபாரியும் ஜெயசிங்கனும் தாங்கள் விற்பனைக்குக் கொணர்ந்திருந்த குதிரைகளுடன் பயணப்பட்டபோது பாதையை அவை அடைத்துக்கொள்ளவே செய்தன. பழையாறையிலிருந்து தஞ்சாவூருக்கு வந்தபோது நாலு கால் பாய்ச்சலில் குதிரையை விரட்டிக்கொண்டு வந்த விஜயாலயன் இப்போதோ மிதமான வேகத்தில் செலுத்தினான். இடையிடையே நண்பனுடன் உற்சாகமாகப் பேசிக்கொண்டும் வந்தான். குதிரைகளின் குளம்பொலிகள் எழுப்பிய சத்தத்துக்கும் மேலே அவர்கள் குரலை உயர்த்திப் பேச வேண்டியிருந்தாலும் அதை ஒரு பொருட்டாக எண்ணாமல் அவர்கள் உரையாடல் தொடர்ந்தது. குதிரைகளும் உல்லாசக் குதி நடை போட்டன. ஒரு மழை பெய்து சாலை நனைந்திருந்ததால் புழுதி அடங்கி அவர்களுக்கு வசதி செய்தது. சூழ்நிலையும் குளிர்ந்து சுகிக்கச் செய்தது.

மனம் இலேசாக, வாலிபர்களின் உள்ளங்கள் இயல்பாக இள மங்கையரை எண்ணின. அருகே இல்லாத ஆனால் அருகிலிருந்தால் இப்போதைய மகிழ்ச்சியைப் பல மடங்காக அதிகரிக்கக் கூடிய அணங்குகளைக் குறித்து அவர்கள் நினைத்ததுடன் அந்த நினைவுகளைப் பகிர்ந்து கொள்ளவும் செய்தார்கள்.

அராபிய உடையில் இருக்கும் விஜயாலயனைப் பார்த்து ஜெயசிங்கன், ''பிரபோ, உங்களுக்குத் தெரியுமா? அராபியச் செல்வந்தர்களின் அந்தப்புரங்களில் அழகிகளுக்குப் பஞ்சமே கிடையாதாம்!'' என்றான்.

''உன்னுடைய மாளிகையிலும்தான் பல பணிப் பெண்களை வைத்துக்கொண்டிருக்கிறாய்!'' என்ற விஜயாலயன், ''ஜெயசிங்கா! ஆனால் நீ இந்த உடையை அணியச் சிறிதும் தகுதி யற்றவன். அராபியத் தனவந்தர்களின் அந்தப்புரங்களில் பல பெண்கள் இருந்தாலும் அவர்கள் அனைவருக்கும் மனைவி என்ற அந்தஸ்தை அளித்துக் கௌரவிப்பார்கள். நீயோ பணிப் பெண்கள் என்று கூறிப் பல அழகிகளை வேலைக்குத்தான் அமர்த்திக் கொண்டிருக்கிறாய்!'' என்றான்.

''ஓர் அழகியை அனுபவித்த பின் அவளை நிராதரவாக விட்டுவிடுவதை விட ஆயுட்காலத்துக்கு அவளைக்காப்பதுபெரிதில்லையா?'' என்று வாதாடினான் ஜெயசிங்கன். ''என் மாளிகையில் நீங்கள் பார்த்த பெண்கள் சந்தோஷமாகவும் ஆரோக்கியமாகவும் இருக்கிறார்கள். அவர்களை வெளியேற்றினால் தஞ்சை நகரின் தாசிகள் தெருவுக்குத்தான் போய்ச் சேர நேரிடும். சில நாளிலேயே வியாதி பீடிக்க, அழகு குலைந்து அவர்கள் வாழ்க்கையே நாசமாகி விடும்!''

''அது சரி, ஆனால் நீயும் அவர்களை விருந்தினரை மகிழ்விக்கத்தானே பயன்படுத்துகிறாய்?''

''வெகு அபூர்வமாகத்தான் அத்தகைய கட்டளை பிறக்கும். அவர்களும் ரசனையோடு அதை நிறைவேற்றுகிறார்கள். சொல்லப் போனால் ஒரு எதிர்பார்ப்புடன் காத்திருக்கவும் செய்கிறார்கள். பெருமையாகவே எண்ணுகிறார்கள். தாசிகள் தெருவோடு போவோரை அழைத்துத் தங்கள் உடலை விற்பதற்கும், என் மாளிகையிலேயே வாழ்ந்து வரும் மங்கையர் விருந்ினரை வரவேற்பதற்கும் வித்தியாசமில்லையா என்ன?... பிரபோ! மதாலசா உங்கள் மனம் கோணாமல் நடந்து கொண்டாள் அல்லவா?''

பொய்யான கோபத்துடன் நண்பனைத் திரும்பிப் பார்த்தான் அராபியன். ஆனாலும் முகம் சிவந்தது சினத்தால் அல்ல என்பது பார்த்த உடனேயே புரிந்து போயிற்று ஜெயசிங்கனுக்கு. சிரித்தான்.

''ஜெயசிங்கா!'' என்று அதட்டினான் விஜயாலயன்.

''பிரபோ! உங்கள் அதட்டல் மிரட்டலெல்லாம் என்னிடம் பலிக்காது. நீங்கள் சொல்லாவிட்டால் என்ன? மறுநாள் காலை மதாலசாவின் முகத்தைப் பார்த்தே நான் தெரிந்து கொண்டு விட்டேன்!''

''சீச்சீ!'' என்று போலியாக அருவருத்தபடியே அங்கு படியிலிருந்து காலை எடுத்துப் பக்கத்தில் வந்த நண்பனை உதைப்பது போல் அராபியன் பாவனை செய்ய, ஜெயசிங்கனும் விலகிக் கொள்வது போல் நடித்தான்.

''இளவரசே! ஏன் இந்தக் கோபம்? தங்கள் அதிகாரிகள் தாங்கள் இட்ட கட்டளையொன்றை நிறைவேற்றிய பின்னர் தங்களிடம் வந்து காரியம் நல்லபடியாக முடிந்தது என்று அறிவிப்பதில்லையா? என்ன... அது போல....''

''போதும்! போதும்! நிறுத்து!'' என்று அலறினான் விஜயாலயன்.

''என்னவோ உலகில் இல்லாத அதிசயம் போல் இப்படி வெட்கப்படுகிறீர்களே? உங்களுக்குப் பிடிக்கவில்லையானால் நிறுத்திக் கொள்கிறேன்.'' என்ற ஜெயசிங்கன் நிறுத்தாமல் தொடர்ந்தான்: ''உங்களுடையது ராஜ தந்திரம், என்னுடையது வியாபாரத் தந்திரம். பெருந்தனக்காரரான ஒரு வணிகருடன் இரவு நேரத்தைக் கழித்த பெண்ணிடம் மறுநாள் காலை நான் பேசும்போது அவரைப் பற்றிப் பல விஷயங்கள் எனக்

குத் தெரிய வருகின்றன. அதனால் என் வாணிபத்துக்கு அனுகூலம் ஏற்படுகிறது...., மனசைத் தொட்டுச் சொல்லுங்கள், இளவரசே! கூடல்மாநகருக்கு உங்களிடம் உள்ள ஒற்றர்கள் பலருள் ஒருவனை அனுப்பாது ஏன் குவளையைத் தேர்ந்தெடுத்தீர்கள்?''

''அவள் திறமைசாலி என்பதால்.''

''அதோடு ஒரு பெண் என்பதாலும்தான். கருநிற அழகி; கண் வீச்சிலேயே ஒருவனைக் கட்டிப் போட வல்லவள்; புன்னகையிலேயே ஒருவனை மோகிக்கச் செய்பவள். தவிர ஓர் ஆண் மகனின் துடுக்குப் பேச்சு கோபத்தை மட்டுமே கிளர்ந்தெழச் செய்யும். ஒரு பெண்ணின் வாய்த் துடுக்கோ கூடவே கிளுகிளுப்பை ஏற்படுத்தும்; ஆர்வத்தையும் உருவாக்கும். இதையெல்லாம் அறியாதவரா நீங்கள்?''

சற்று நேரம் மௌனமாய்ச் சென்ற பின் விஜயாலயன் கேட்டான்: ''ஜெயசிங்கா! மதாலசா மறு நாள் காலை உன்னிடம் என்ன சொன்னாள்?''

குபீரென்று சிரித்தான் ஜெயசிங்கன். ''எனக்கு வெட்கமாயிருக்கிறது; ஆளை விடுங்கள்'' என்று விஜயாலயனை மேலும் பரிகசித்தான்.

''ஆளை விடுவதாவது. ஆணையிடுகிறேன்!'' என்றான் விஜயாலயன்.

''சரி, சொல்கிறேன். ஆனால் கேட்டுவிட்டு மறுபடியும் கோபிக்கக் கூடாது'' என்று உறுதிமொழி பெற்றுக் கொண்டு ஜெயசிங்கன் கூறினான்: ''நீங்கள் பெருஞ் செல்வந்தராம். தங்கள் தாய் நாட்டில் ஏராளமான சொத்துக்களை, நிலபுலன்களை உடையவராம். ஆனாலும் உங்களுக்கும் மேலே ஒருவன் — உறவினனோ, வியாபாரக் கூட்டாளியோ, அரசு அதிகாரியோ, யாரோ ஒருவன் இருந்து

நமது புராணங்களில் வரும் கற்புக்கரசிகளில் ஒருத்தி சீதா — தெரியும்.

நீதித்துறையில் SITA என்றால் விபச்சார ஒடுக்குச் சட்டம் - (SUPPRESSION OF IMMORAL TRAFFIC ACT) எனப் பொருள்.

--கே. வி. கோபால்



கொண்டு உங்களை ஆட்டுவிக்கிறானாம். அதனால் நீங்கள் மனம் நொந்து இருக்கிறீர்களாம்... வாழ்க்கையில் உங்களால் வெளிப்படுத்த முடியாதிருக்கும் ஆளுமையைக் கட்டிலிலே காட்ட முற்படுகிறீர்களாம்!''

''பிதற்றல்'' என்றான் விஜயாலயன் உண்மை என்று ஒப்புக்கொள்ள விரும்பாதவனாக. ''அப்புறம்....?''

''நீங்கள்தான் பிதற்றல் என்கிறீர்களே... அப்புறம் கேட்பானேன்?''

''சொல்லித் தொலை'' என்றான் அலுத்துக் கொள்பவன் போல நடித்து.

''வேறு யாரோ கிட்டாத, அல்லது அணுக முடியாத நங்கை யொருத்தியை மனத்தில் வைத்துக் கொண்டு மதாலசாவை அணைத்தீர்களாம்!''

தூக்கி வாரிப் போட்டது விஜயாலயனுக்கு. மறைத்துக் கொண்டான். நீண்ட மௌனத்துக்குப் பிறகு பேசினான்: ''பொறுப்பான பதவிகளில் இருப்பவர்கள் பெண்ணாசை கொண்டு அலைவது எவ்வளவு ஆபத்து பார்த்தாயா? நாம் ஒரு வார்த்தை கூடப் பேசாது, எச்சரிக்கையாக இருக்கும்போதே நமது உள்ளத்தில் ஆழத்தில் இருப்பதை அகழ்ந்தெடுத்து விடுகிறார்களே! நாம் சற்றே நாத் தளர்ந்தால் என்னதான் தெரிந்து கொள்ள மாட்டார்கள்!''

''மெய்தான் பிரபோ! சாம்ராஜ்யங்கள் தோன்றுவதும் பெண்ணாலே அழிவதும் பெண்ணாலே என்று பேசப்படுவது இதனால்தான்!''

''ஜெயசிங்கா! மதாலசா குறிப்பிட்டாளே அந்த இன்னொரு பெண், அது யார் என்று புரிந்ததா உனக்கு?''

''புரியாமலென்ன பிரபோ? அவளைக் காணத்தானே இப்போது சென்றுகொண்டிருக்கிறீர்கள்!''

''ஏற்கனவே நீ அவளைப் பார்த்திருக்கிறாயா!'' — ஆர்வத்துடன் கேட்டான் விஜயாலயன்.

''ஓ! இரண்டு மூன்று தடவைகளில். அவள் அணிந்துள்ள முத்தாரங்களும் வங்கியில் பதித்திருக்கின்ற வைரங்களும் மேகலாபரணத்தில் இடம் பெற்றுள்ள ரத்தினங்களும் என்னிடமிருந்து வாங்கப்பட்டவைதான்.''

''கவிதையும் ஓவியமும் எடுத்துக் காட்டுவது போல அவள் அத்தனை அழகியா?''

''எந்தக் கவிதையும் அவள் எழிலுக்கு நியாயம் செய்ய முடியாது. எந்த ஓவியமும் அவள் அழகைப் பிரதி எடுத்ததாகாது. அழகுத் தத்துவமே இவள் அழகைக் கண்டு தலை குனியும். இத்தகைய பேரெழிலே அவளுக்குக் கெடுதலும் செய்கிறது. அவளை கர்வக்காரியாக்கி விட்டது. எத்தனையோ ஆணழகர்கள் முத்தரையரின் அரசவையிலேயும் இருக்கிறார்கள். வெளி தேசங்களிலிருந்து ராஜாங்க காரியமாக வந்து போகவும் செய்கிறார்கள். எல்லோருமே இவளைக் கண்ட மாத்திரத்தில் இவளை அடைய முடியுமா என்று ஏங்கத்தான் செய்கிறார்கள். இவள் மனம்தான் யாருக்குமே புரியாத புதிராக இருக்கிறது. இன்றைக்கு ஒருவனைப் பார்த்துக் கண்களைச் சிமிட்டிப் புன்னகைப்பாள். இரண்டு நாட்கள் கழித்து வேறு

ஒருவனைச் செல்வமாகக் கேலி செய்து பரவசப்படுத்துவாள். இப்படிப் பல பேர் மனங்களைக் கிளறிவிட்டுத் தான் எதிலும் சிக்காமல் இருப்பதிலேயே ஓர் ஆனந்தம் காண்கிறாள்! பிரபோ! உங்களிடம் மறைப்பானேன்? நான்கூட அவருடைய ஒரு இன் சொல்லுக்காக அவள் பாதத்தில் என்சிரம் பட வணங்கக் காத்திருந்தவன்தான்.''

''இப்போது அந்த மன நிலையில் நீ இல்லையாக்கும்!''

''உங்கள் கருத்தறிந்த பின் நான் போட்டியிட எனக்கென்ன பைத்தியமா பிடித்திருக்கிறது?''

''பித்தர்களாகத்தானே ஆக்கிக் கொண்டிருக்கிறாள், சந்திக்கும் ஆடவரையெல்லாம்? தப்பிப் பிழைத்தவன் நீ!''

''வித்தியாசமாய்நினைக்காதீர்கள் பிரபோ. அவள் பேரழகும் உயர் நிலையும் அவளிடம் ஏற்படுத்தியுள்ள எதிர்மறையான சிறிய பலவீனம் இது. மற்றபடி அவள் நல்லவள், தூயவள். மகா அறிவாளி. ஆடல் பாடல் கலைகளில் வல்லவள். முத்தரையரின் நேர் வாரிசு இல்லாவிடினும் அரச குல ரத்தம் தான் ஓடுகிறது அவள் நாளங்களில். சுருங்கச் சொல்வதென்றால் சகல விதங்களிலும் சோழ தேசத்தின் ராணியாக அரியணையை மன்னருடன் பகிர்ந்து கொள்ளத் தகுதி பெற்றவள்!''

இந்தச் சமயத்தில் அந்த இளைஞர்களுக்குப் பின்னாலிருந்து அடிவானத்தில் திரண்ட மழை மேகங்களின் இடி முழக்கம் போன்ற உறுமல் ஒலி கேட்க, ''மழை வலுக்கும் போலிருக்கிறதே'' என்று சற்றுக் கவலையோடு வினவினான் ஜெயசிங்கன்.

**கா**து கொடுத்துக் கவனித்த விஜயாலயன், ''அது இடிமுழக்கம் இல்லை நண்பனே! நான்கு குதிரைகள் பூட்டப் பெற்ற ஒரு ரதம் நமக்குப் பின்னால் சாலையில் வெகு வேகமாக முன்னேறி வருகிறது. அத்துடன் சில குதிரை வீரர்களும் காவல் வருகிறார்கள்'' என்றான்.

இதைக் கேட்டதும் ஜெயசிங்கனுக்கு ஏற்பட்ட வியப்பு மேலும் அதிகரிக்கும்படியாகச் சில நொடிகளில் விஜயாலயன் சொன்ன மாதிரியே சாலையின் ஒரு வளைவில் திரும்பி நான்கு குதிரைகள் பூட்டப்பெற்ற ஒரு ரதம் வெகு விரைவாக முன்னேறி வந்தது. அதன் முன்னும் பின்னுமாக இரண்டு இரண்டு வீரர்கள் குதிரைகளில் ஆரோகணித்துக் காவல் வந்தனர். அவர்கள் தாங்கி வந்த வேல் கம்புகளின் மேல் முனையிலும், ரதத்தின்உச்சியிலும் சிம்மக்கொடிகள் பறந்து பல்லவ சக்கரவர்த்தியின் உயர் அதிகாரி ஒருவர் வருவதை உணர்த்தின.

''ஜெயசிங்கா! நான் அராபியன். உன் நண்பன். மறக்காதே! அவர்களைக் கவனித்ததாகவும் காட்டிக் கொள்ளாதே''என்ற விஜயாலயன் பின்புறம் பார்க்கத் திரும்பியிருந்த உடலை நேராக்கிக் கொண்டு நிதானமாகக் குதிரையைச் செலுத்திச் சென்றான். நண்பர்கள் இருவரும் அவர்களுடன் விற்பனைக்கு வந்த குதிரைகள் பலவும் பரவலாகச் சாலையை அடைத்துக் கொள்ள,




நெருங்கி வந்த வீரர்களும், ரத சாரதியும் வேகத்தைக் குறைத்துக் கொண்டனர். முன்னால் வந்த வீரர்கள், ''ஏய்! யாரது! பல்லவ மாதண்ட நாயகரின் ரதம் வருவது தெரியவில்லை? ஒதுங்கு ஒதுங்கு!'' என்று அதட்டினான்.

அப்போதுதான் திரும்பிப் பார்த்தனர் இருவரும். ஜெயசிங்கன், ''கவனிக்கவில்லை ஐயா! இதோ விலகிக்கொள்கிறோம்'' என்று கூற நண்பர்கள் மரியாதை காட்டி நடித்தபடி உடன் வந்த குதிரைகளைச் சாலையின் இரு மருங்கிலும் ஒதுக்கியதுடன் தாமும் ஒதுங்கினர். இடையே வழி ஏற்பட அதனூடே புகுந்து பாய்ந்தனர் முன்னணி வீரர்கள். ரதம் பின்தொடர்ந்தது. ரத சாரதி அராபியனையும், ஜெயசிங்கனையும் மாறி மாறித் துச்சமாகப் பார்த்தான். ''மரியாதை தெரியாத பயல்கள்!'' என்று கூறியதுடன், வசை மொழி ஒன்றினையும் உதிர்த்துச் செருக்குடன் சவுக்கைச் சொடுக்கினான். ரதத்தில் பூட்டிய நான்கு குதிரைகளில் முன்னால் உள்ள இரு குதிரைகளையும் எட்ட வேண்டி நீளமாக அமைந்திருந்த அந்தச் சவுக்கு குதிரைகளைத் தாக்குவதற்குப் பதில் அராபியனைத் தீண்டியது. மாதண்ட நாயகருக்குத் தேர் ஓட்டுகிறோம் என்ற மமதையுடன் சொடுக்கப் பட்டுச் சீறிய அந்தச் சவுக்கு யதேச்சையாக அல்ல, வேண்டுமென்றேதான் தன் கரத்தைக் கொத்திச் சதையைக் கிளறிக் குருதியை வாங்கியது என்பதைப் புரிந்து கொண்ட அதே கணத்தில் விஜயாலயனின் கரம் மின்னல் வேகத்துடன் இயங்கி சவுக்கின் நுனியைப் பற்றிச் சுற்றி வளைத்துக் கொண்டு ஒரு நொடிப்புடன் இழுக்க, இதைச் சற்றும் எதிர்பாராத தேரோட்டி சவுக்கைக்

கெட்டியாகவே பற்றியிருக்க நிலை குலைந்து "ஐயோ" என்ற அலறலுடன் கீழே விழுந்தான்.

குதிரைகள் கட்டுப்படுத்துவாரின்றி முன்னிலும் வேகம் பெற்று அதி விரைவாய் ஓடத் தொடங்கின. முன்னால் சென்ற இரு முன்னணி வீரர்களையும் முந்திக் கொண்டு பாய்ந்தன. முன்னும் பின்னுமாக இருந்த வீரர்கள் நால்வரும் இப்போது ஒன்றாக இணைந்து நின்று தறிகெட்டு ஓடிய குதிரைகளையும் அவை இழுத்துச் செல்லும் ரதத்தையும் பார்த்து இன்னது செய்வது என்று புரியாமல், "ஐயோ! ஐயோ! ஆபத்து! ஆபத்து!" என்று கூச்சலிட்டனர்.

ரதத்தின் உள்ளே ஏதோ யோசனையாக இருந்த பாராசிரயன், அரவம் கேட்டும், குதிரைகள் கட்டுப்பாடிழந்து காற்றினும் கடிதாகச் செல்வதை உணர்ந்தும் திரைகளை விலக்கி விட்டு வெளியே பார்த்தார். குதிரைகளை அடக்கவும் எண்ணினார். ஆனால் கடிவாளக் கயிறுகள் தரையோடு தரையாக விழுந்து சாலையில் கைக் கெட்டாத தூரத்தில் புரண்டு கொண்டு வந்தமையால் அவரால் ஏதொன்றும் செய்ய முடியாது போக, பீதி கவ்வச் செயலற்றுப் போனார்.

விஜயாலயன் ஜெயசிங்கனுக்கு ஜாடை காட்டிவிட்டுத் தான் ஆரோகணித்திருந்த குதிரையின் வயிற்றைக் கால்களால் உந்த அது நாலு கால் பாய்ச்சலில் பறந்தது. சீக்கிரமே ரதத்துக்கும் அவர்களுக்கும் இடைவெளி குறைந்து வர விஜயாலயன் குனிந்து முன் குதிரை ஒன்றின் கடிவாளத்தைப் பற்றினான். அதே நேரத்தில் மறுபுறமும் முன் குதிரையின் கடிவாளத்தை ஜெயசிங்கன் கைப்பற்ற தேர், சில கணங்களுக்குள் நிலைக்கு வந்தது.

ராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள ஒரு குக்கிராமம் பெருமாள் தேவன் பட்டி. ஜனத்தொகை சுமார் 1800 இருக்கும். ஸ்ரீவில்லிபுத்தூர் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த இக் குக்கிராமத்திலிருந்து சுமார் 300 பேர் இராணுவத்திற்கு அனுப்பப்பட்டுள்ளனராம். ஒரு குடும்பத்தில் அறுவர் இருப்பின் அவர்களில் ஒருவர் இராணுவத்தில் (பணியாற்றிக் கொண்டு)தான் இருக்கிறாராம். அங்ஙனம் சென்றவர்களில் சிலர் "மேஜர்" தகுதிவரை வந்திருக்கிறார்களாம். "குட்டி பஞ்சாப்" என்றழைக்கப்படும் இக் கிராமத்திற்கு இராணுவத்தில் பணிபுரிபவர்கள் மூலம் மாதம் சுமார் ரூபாய் ஒரு லட்சம் வரை வருவதாக இவ்வூர் பெரியவர்கள் கூறுகிறார்கள்.

தொகுப்பு: கனைஜா



"பெரிய ஆபத்திலிருந்து என்னைக் காப்பாற்றினீர்கள்! நன்றி!" என்றார் பாராசிரயன், வியர்வையை உத்தரீயத்தால் ஒற்றியவாறே.

"ஐயா! ஆபத்து உமது மமதை கொண்ட தேர்ப்பாகன் வடிவில் வந்ததுதான். நீங்கள் மிடுக்குக் காட்டலாம். உங்கள் உயர் பதவிக்கு அது அவசியமும் கூட. ஆனால் உங்கள் தேர்ப்பாகன் திமிர் கொண்டலையலாமா? மல்லாந்து படுத்த மனிதன் உலகைத் தான் தான் முதுகில் தாங்குவதாக எண்ணினால் எப்படி?" என ஜெயசிங்கன் கேட்க, இதற்குள் நொண்டி நொண்டி நடந்து வந்து கொண்டிருந்த தேர்ப் பாகனைத் திட்டித் தீர்த்தார் பாராசிரயன். காவலர்களையும் கண்ணியம் காக்குமாறு கண்டித்துவைத்தார். தன்னைக் காத்த இளைஞர்களுக்கு மீண்டும் நன்றி கூறி அவர்கள் பெயர்களையும் தொழிலையும் தெரிந்து கொண்டு புறப்பட்டார். "போய் வருகிறேன்! பல்லவ மாதண்ட நாயகன் என்றைக்காவது ஏதாவது உதவி செய்ய முடியுமென்று தோன்றினால் தயங்காமல் வந்து கேளுங்கள்!"

அவரும் அவர் பரிவாரமும் பார்வையிலிருந்து மறைந்ததும் ஜெயசிங்கன் கூறினான்: "பிரபோ! சகுனம் சரியில்லை. பாராசிரயனும் சந்திரலேகைதான் செல்கிறான். இவனுடைய பாம்புச் செவிகளும் கழுகுக் கண்களும் அங்கிருக்கும்போது நீங்களும் அங்கு போய் என்ன செய்ய? அரசவையில் யாரிடம் என்ன பேசி உருப்படியாக எதைச் சாதிக்க முடியும்? தஞ்சைக்கே திரும்பி விடலாமா? நான்கைந்து நாட்கள் கழித்து மறுபடியும் புறப்படலாம். அதற்குள் கழுகு முத்தரையனின் தலை நகரிலிருந்து திரும்பியிருக்கும்!"

"ஜெயசிங்கா கவலைப்படாதே" என்றான் விஜயாலயன். "பாராசிரயன் விரும்பியது சந்திரலேகைக்குத்தான். ஆனால் அவன் அங்கு போய்ச் சேரப் போவதில்லை!"

"அதெப்படி அவ்வளவு உறுதியாகக் கூறுகிறீர்கள், இளவரசே!"

விஜயாலயன் முஷ்டியாகியிருந்த தன் இடக் கரத்தை நீட்டி, அகலமான உள்ளங்கையை விரித்துக் காட்ட, அதன் மீதாகக் காட்சியளித்தது கரிய மையை அவன் விரல்களிலெல்லாம் தீட்டிவிட்ட ஒரு கடையாணி!

தேர்ச் சக்கரத்திலிருந்து உருவப்பட்டு இப்போது விஜயாலயன் கரத்திலிருந்த அந்தக் கடையாணியைச் சற்று நேரம் மலங்க மலங்க விழித்துப் பார்த்த ஜெயசிங்கன் குபீரென்று சிரிக்க, அந்த நகைப்பில் விஜயாலயனும் அடக்க மாட்டாமல் கலந்து கொண்டவாறே வீசி எறிந்தான் கடையாணியை. அது வானில் ஜில்லென்று வெகு தூரம் காற்றைக் கிழித்துக்கொண்டு பறந்து சென்ற பின்னர் அரை வட்டமாகக் கீழிறங்கி ஒரு வயலின் தளிர்ப் பச்சைக்கிடையில் தஞ்சம் புகுந்து மறைந்தது.

(தொடரும்)

# கலைமகள் பொன்விழா

டி. வி. காமிராவும், யாஷிகாவும் பளீர் பளீர் என்று படங்கள் எடுத்துத் தள்ள, நட்சத்திர எழுத்தாளர்கள் முதல் நாளை பெயரெடுக்கப் போகும் எழுத்தாளர் வரை உற்சாகத்துடன் வர, வாசக அன்பர்கள் முதல் போலீஸ் ஐ. ஜி. க்கள், தொழிலதிபர்கள், ஒவ்வொருவராய் வந்து இறங்க, மே மாத முதல் தேதி மாலை, ஆபட்ஸ்பரி மண்டபம் அசாத்தியக் கலகலப்பாய்க் காணப் பட்டது.

காரணம்—

'கலைமகள்' மாத இதழின் பொன் விழா.

வருகிற அத்தனை பேரையும் கி.வா.ஜ. கைகுலுக்கி வரவேற்றார். (அகிலன் வந்த போது 'அகிலமே வந்தாயிற்று!' என்றார்) ஜெமினி கணேசன், எழுத்தாளர் லட்சுமியைப் பார்த்து 'எப்படி இருக்கிறீர்கள்?' என்று கேட்டது மட்டுமல்ல, வேறு பல எழுத்தாளர்களையும் நட்புடன் விசாரித்தார். பத்திரிகை அதிபர்கள் சாவி,



✕ அரங்கிலே ம. பொ. சி. ஆர். வி., வீரப்பன், பால சுப்பிரமணியம், அகிலன்.







✕ அமரர் ராமரத்தினத்தின் படத்தைத் திறந்து வைத்த நீதிபதி பாலசுப்பிரமணியமும் கி. வா. ஜ-வும்




✕ அட்டைப்படத்தில் கலைமகள் சின்னத்துடன் இணைபவர்கள் ஸ்தாபகர் நாராயணசாமி அய்யர்; ஆசிரியர் கி. வா. ஜ.



✕ பொன்விழா மலரை அமைச்சர் வீரப்பனிடமிருந்து பெறுகிறார் பெ. நா. அப்புசாமி



✕ பொன்விழாக் கேடயம் பெறுபவர் எஸ். வி. நரசிம்மன், தருபவர்: சிலம்புச் செல்வர்

மணியன், 'ஹிந்து' முரளி, 'சிம்ப்ஸன்' சிவசைலம் என்று பலர். கதர்ச் சட்டை வேட்டிகள் முதல் ஸஃபாரி ஸூட்டுகள் வரை முன் வரிசையில் தென்பட்டன.

அரசியலும் சினிமாவும் இன்றைய பத்திரிகைகளின் உயிர்நாடியாக இருக்கும் போது, இவை இரண்டையுமே தீண்டாமல் ஒரு பத்திரிகை வெற்றிகரமாகச் செயல்பட்டு பொன் விழாவும் கொண்டாடுவது மிகப் பெரிய சாதனை என்று பாராட்டினர் பாரதப் பாதுகாப்பு அமைச்சர் ஆர்.வி.

மேடையில் பொன் விழாப் பலகையைத் திறந்து வைக்கப் பொத்தானை அமுக்கினர் ஆர். வி. ஊஹூம். திரை விலகுவதாயில்லை. உதவிக்கு வந்த ஆர். எம். வி. கைகளாலேயே திரையை விலக்கினர் ஆர். வி.யுடன் சேர்ந்து. கி. வா. ஜ.வின் சிலேடைக் காற்று ஆர். வி.க்கும் அடித்ததோ என்னவோ, "கரன்ட்டால் திறக்க முடியவில்லை; கரத்தால் திறந்தோம்" என்று மண்டபத்தைக் கைத் தட்டலில் மூழ்க வைத்தார்.

"நானும் கலைமகளில் எழுதியிருக்கிறேன். எழுதி, கிடைத்த சன்மானத்தை அகிலன் மூலம் எழுத்தாளர் சங்கத்துக்குக் கொடுத்து விட்டேன். ஆகவே நானும் கலைமகளால் அங்கீகரிக்கப்பட்ட எழுத்தாளன்!" என்றார் மூலவருக்குப் பதில் உற்சவராக வந்திருந்த அமைச்சர் ஆர். எம். வீரப்பன்.

"கலைமகள் என்ற பெயரே எத்தனை அழகாகவும், ஒரு பத்திரிகைக்குப் பொருத்தமாகவும் இருக்கிறது பாருங்கள்! இப்போது வருகிற பத்திரிகைகளின் பெயர்களோ தடாபுடாவென்று இடியோசை மாதிரி அல்லவோ இருக்கிறது!" என்று கெகிகெப்பாணியில் கிண்டல் செய்தார் ம. பொ. சி. (ஞாநி வந்திருக்கிறாரோ என்று பார்த்தேன். வந்திருந்தார், வழக்கமான ஜிப்பாவும், ஜோல்னாப் பையுமாக.)

கலைமகளின் நூற்றாண்டு விழா கொண்டாடப்படும்போதும், தாம் அதில் கலந்துகொள்ள வேண்டும் என்றும் அப்போது கி. வா. ஜ. அவர்களும் உடனிருந்து நடத்த வேண்டும் என்றும் ஆசையை வெளியிட்ட எழுபத்தாறு வயது ம. பொ. சி., ஆர். வி.யைப் பார்த்து, 'நீங்களும் இருந்து தலைமைதாங்க வேண்டும்!' என்று ஆரோக்கியமான வேண்டுகோள் விடுத்தார். (சிலம்புச் செல்வர் சொன்ன ஒரு குட்டி ஜோக்: "நான் சட்ட மேலவையில் ஸ்பீக்கர், ஆனால் பேசக் கூடாது!")

"நான் கலைமகளின் செல்லப் பிள்ளைதான். ஆனால் நல்ல பிள்ளை!" என்று (தமக்கே) ஒரு சர்டிபிகேட் கொடுத்துக் கொண்டார் அகிலன். கி. சந்திரசேகரனின் பாசம் நிறைந்த பாராட்டுக்கள், ஸ்ரீமதி சௌந்தரா கைலாசத்தின் வாழ்த்துக்களுடன், எழுத்தாளர், ராஜம் கிருஷ்ணனின் 'பெண் குர'லும் அங்கே ஒலித்தது.

'கைவருந்தி உழைப்பவர் தெய்வம்—கவிஞர் தெய்வம்' என்று பாரதி பாடியது மே தினத்தன்று நடந்த கலைமகள் பொன் விழாவுக்குப் பொருத்தமாகவே இருந்தது.

—சாருகேசி; படங்கள்: ரமணி

# ராம்ஜிக்கு நன்றி!



ராம்ஜி நடத்தும் அபஸ்வரத்தில் இந்தச் சிறுமி அனிதா பாடுவதைப் பலர் பார்த்தும் கேட்டும் இருக்கலாம்.

ஆனால் மூன்று வயது வரை இவள் ஊமையாக இருந்தாள் என்பது எத்தனை பேருக்குத் தெரியும்?

பேசத் தொடங்கியது வேளாங்கண்ணி மாதா அருள்.

இவள் பேசும் ஆற்றலை வளர்க்கப் போலீஸ்காரரான தந்தை அடிக்கடி ரேடியோவில் பாடல்களைக் கேட்கச் செய்து பாடும்படியும் ஊக்குவிப்பார்.

அந்தப் பழக்கமே பாடகியாக்கியது. இப்போது சங்கீதா எனப் பெயர் மாற்றிக்கொண்டுள்ள அனிதா மனம் நெகிழ்ந்து நன்றி கூறுவது ராம்ஜிக்கு—ஆதரவு அளித்தமைக்காக. இதுவரை பங்கேற்ற நிகழ்ச்சிகள் 200க்கு மூன்று குறைவு.

—வெம்ஜி

# வெப்பத்தால் நீங்கள் வலுவிழந்து வாடுகையில்...



உங்களுக்கு நம்பகமான க்ளாக்ஸோஸ்-Dயின் புதிய பெயர்.

உட்கொள்ளுங்கள் **க்ளூகோன்-டி**®

**அதிக சக்தி—உங்களுக்குத்தேவையான போது.**

வெப்பத்தைப் போல் உங்களை வலுவிழக்க செய்வது பிறிதொன்றில்லை. கோடையின் வெப்பத்திலே வடிந்து விடும் உங்கள் சக்தி யெல்லாம். அப்போது தான் உங்களுக்குத் தேவை புத்துணர்ச்சி தரும் குளுமையான க்ளூகோன்-டி. அது உங்களுக்கு அதிக சக்தி தருகிறது-உங்களுக்குத் தேவையான போது.

30 ஆண்டுகட்கும் மேலாக இலட்சக் கணக்கானோர்-க்கு நம்பகமான க்ளாக்ஸோஸ்-டி யின் புதிய பெயர் தான் க்ளூகோன்-டி. எந்த பானத்திலும் அதைக் கலந்து அருந்தலாம்; பழரசம், பால், தேநீர், காபி, தண்ணீர் இவற்றிலே கலந்தோ, நேரடியாகவோ உட்கொள்ளுங்கள். திரும்பவும் பெருகிவரும் சக்தியை உணர்வீர்.

உங்கள் குடும்பத்தினர் அனைவர்க்கும் கொடுங்கள் க்ளூகோன்-டி; மேற்கொண்டு தத்தம்பணிகளில் அவர்கள் ஈடுபட-விளையாட்டிலும், வேலையிலும். க்ளூகோன்-டி— உங்களுக்கு வழக்கமான அதே பச்சை உறையிலே கிடைக்கிறது.






வைட்டமின்-டி மற்றும் கால்ஷியம் ஃபாஸ்ஃபேட் கொண்டு வளமூட்டிய அசல் க்ளூகோஸ் பவுடர்—**க்ளாக்ஸோ** அளிக்கிறது.

HTB-GEL-4737 TL

## 18

தோட்ட வேலை செய்ய வந்திருந்த மாரப்பன்தான் அந்த யோசனையைச் சொன்னவன்.

''ரீப்பர், ஓடு, சிமெண்ட், கூலி எல்லாம் கூடிவிட்டதாலே முன்னிருந்த மாதிரி ஒரு பெரிய நல்ல ஓட்டுக் கட்டடமா மாட்டுக் கொட்டிலை எடுக்க ரொம்பப் பணம் பிடிக்குமாம். அதனாலே நானே நாலு ஆளுங்களைக் கூட்டியாந்து இடிபாடுகளை அப்பால ஒழுங்கா எடுத்துக் குவிக்க வைச்சுட்டு ஏற்கனவே நல்லா கல் பாவியிருக்கிற தரையைச் சுத்தப் படுத்தி அது மேலே ஒரு கீத்துக் கொட்டா போட்டுடலாம். மழைச் சாரல் படாதிருக்கச் சுத்தியும் தட்டி வைச்சு மறைச்சுக்கலாம். எனக்குத் தெரிஞ்சவங்க இருக்காங்க.. கூடக் கொறையக் குடுத்தாலும் சரின்னு ஒத்துக்கு வாங்க. நம்ப தென்ன மரத்திலேருந்து கீத்துக்களை வெட்டிப் போட்டுப் பின்னச் சொல்லிக் காயப்போட்டு உபயோகிச்சுக்கலாம். போதாட்டா வெளியேவாங்கிக்கலாம். ஆயிரம் ரூபாய்க்குள்ளே ஒரு வலுவான கொட்டா போட்டுக்கலாம். கவலைப்படாதீங்க...''

மழையிலே செடி கொடி பயிர்களுக்கு ஒரு வகையில் பயன் என்றாலும் அவர்களுக்குக் கிடைக்க வேண்டிய பலன் மிகவும் குறைந்து விட்டிருந்தது. செடிகளிலிருந்து பூக்கள் உதிர்ந்து பிஞ்சுகள் கொட்டிவிட்டிருந்ததினால் அந்த வாரம் மார்க்கெட்டுக்கு அனுப்பும் அளவு காய்களைத் தோட்டத்தில் காணவில்லை.

வருமானம் குறைந்து போனது. செலவுகள் பெருகிப் போயின. இப்படிப்பட்ட ஒரு சூழ்நிலையில் அவளும் அத்தையும் எப்படி நீடித்துக்காலம் தள்ள இயலும்? சந்தியாவுக்கு மாரப்பன் சொன்னதைக் கேட்டுக்கவலை தீவிரமாகியது.

''வீட்டிலேயும் கொஞ்சம் ரிப்பேர் பார்க்கணும். அதனால இப்போ இருக்



ற கன்னுக்குட்டி ஒண்ணுக்காகப் பெரிய கொட்டகை போட முடியாது. வேறே வழி இல்லையா மாரப்பா...'' அவள் குரல் கவலை யில் தேய்ந்தது.

''ஏன் இல்லே...வெய்யத் தெரியாமல் பகல் வேளையிலே வேப்பமரத்தடியிலே கட்டி வச்சுக்கலாம். ராத்திரி வேளையிலே தாழ்வாரத்திலே கொஞ்சம் வைக்கலைப் போட்டு ஜன்னல் கம்பியிலே கட்டி வச்சுடலாம். தினமும் காலையிலே அத்தையம்மாவுக்குத் தாவாரத்தைச் சுத்தப்படுத்தற வேலை ஒண்ணு அதிகமா சேர்ந்திடும். இப்ப சந்தியா இந்த இடிபாடுகளை அப்புறப்படுத்தி ஓடுகளை அடுக்கி வச்சு உடையாத ரீப்பர்களைத் தேர்ந்து கட்டி வச்சு இடத்தைச் சுத்தப்படுத்தணும்.''

''இதுக்குச் சுமார் எவ்வளவு பிடிக்கும்?''— மெல்லிய குரலில் கேட்டாள்.

''அம்மா உங்களுக்குத் தெரியாத சங்கதி இல்லே. இப்போ எல்லாமே விலை ஏறி விட்டதாலே வேலை செய்யற ஆளுங்க கொஞ்சம் முன்னே விடக் கூட எதிர் பார்ப்பாங்க. யாரையாவது பிடிச்சுக் காண்டிராக்ட் கணக்கா குடுத்திட்டா ஒரு நூத்தைம்பது ரூபாய்க்குள்ளே முடிச்சுடலாம். இடிபாடுகளை எடுத்துச் சுத்தப்படுத்துகிற வேலை கட்டடம் கட்டறதை விடப் பெரிய வேலையாச்சேம்மா...''

''முதல்லே அதுக்கு ஏற்பாடு பண்ணு மாரப்பா!'' என்று கூறிவிட்டு அரைக் கூடை கூட நிரம்பாத காய்களைத் தானே சுமந்து கொண்டு உள்ளே வந்தாள் சந்தியா. சம்பளம் வாங்க இன்னும் இரண்டு நாட்கள் தான் இருந்தன. அதற்குள் அதில் இடிபாடு

# சாதாரண மனிதன்

'லக்ஷ்மி'



களை அகற்ற நூற்றைம்பது ரூபாயை எடுத்து ஒதுக்கி வைத்துவிட வேண்டும். பஸ் பயணச் செலவு போக அத்தையின் வட்டிப் பணத்தையும் எடுத்துக் கொண்டு அவர்கள் இருவரும் அடடா... மறந்து போச்சே கன்றுக்குட்டியும் சாம்பனும் சேர்த்து நான்கு உயிர்கள்... பசியாறச் சாப்பிட்டு வாழ வேண்டும். இந்த லட்சணத்தில் அடுப்பங்கரை மேலே பிரிந்து விட்டிருக்கும் கூரையைப் பழுது பார்க்க... ஓடு மாற்றியாக வேண்டும். அதற்குப் பணம்? பெருமூச்செறிந்தாள் அவள். அத்தை காய்களை ஏமாற்றத்துடன் பார்த்தாள். மாரப்பனுக்குக் கொடுக்க வேண்டிய கூலிக்கும் செடிகளுக்குக் கொஞ்சம் எரு வாங்கவும்கூட பணம் தேறுது போலிருக்கே...'' சலித்துக் கொண்டாள்.

காலைக் காப்பி பலகாரத்தை முடித்துக் கொண்டு அடுத்த வாரத்துக்குண்டான பாடக் குறிப்புக்களைத் தயாரிக்கப் புத்தகங்களுடன் வந்து உட்கார்ந்தாள் சந்தியா. முருங்கைக் கீரையை ஆய்ந்து கொண்டு கூடத்துக் குறட்டின் மேல் உட்கார்ந்திருந்த அத்தை வாசல் கதவு இடுக்கு வழியே ஒரு கடிதம் நடை தரைமீது விழுவதைப் பார்த்து விட்டாள்.

தபால் — தந்தி என்றாலே அவளுக்கு மெத்தக் கலவரம். ஜகதாவைப் பொறுத்த வரை அவளுக்குக் கடிதம் எழுத நினைக்கும் நண்பர்களும் நெருங்கிய உறவினர்களும் கிடையாது. எப்பொழுதாவது கடிதம் வரும். கோயில் உற்சவத்துக்கு நன்கொடை கேட்டு — தூரத்து உறவினர் மரணமடைந்துவிட்ட துக்கச்செய்திகொண்ட கார்டு என்று அபூர்வமாக வருவதுண்டு.

எழுந்து சென்று தரையில் கிடந்த தபால் உறையைக் கையில் எடுத்தாள். அது சந்தியாவுக்கு வந்த கடிதம். ''உனக்குத் தபால் வந்திருக்கு'' — சொல்லிக் கொண்டே அவளருகில் மேஜை மேல் கொண்டு வைத்து விட்டு ஜகதா மீண்டும் தன் வேலையைக் கவனிக்கலானாள்.

கையெழுத்தைக் கண்டதுமே சந்தியாவின் நெஞ்சு படபடத்தது.

டாக்டர் ஸ்ரீதரன் அவளுக்குக் கடிதம் போட்டிருக்கிறார்... என்னவாக இருக்கும்? ஆவலை அடக்கமாட்டாது வேகமாக கவரைக் கிழித்துக் கடிதத்தை உருவினாள்.

மிகவும் சுருக்கமான கடிதம். டாக்டருக்கு உகந்ததில்லாத அழகான கம்பீரமான குண்டு எழுத்துக்களில் ஸ்ரீதரன் எழுதியிருந்தான்.

'அன்புள்ள மிஸ் சந்தியா — நான் அவசரமாக அக்கா குடும்பத்தைக் காண பம்பாய்க்குப் போக வேண்டியிருக்கிறது. சென்னை வரை ரயில். பின்னர் விமானம் என்ற ஏற்பாடு. வர இரண்டு வாரங்களுக்கு மேல்பிடிக்கும். பூதலூரில் சில கட்டிட காண்ட்ராக்டர்களை விசாரித்தேன். முன்போல உறுதியான கட்டிடமாக மாட்டுக் கொட்டிலை எழுப்பி முடிக்கக் குறைந்தது எட்டாயிரமாவது செலவாகுமாம். பழைய கற்களையும் ரீப்பர்களையும் ஓட்டையும் உபயோகித்துக் கொஞ்சம் செலவை மட்டுப்படுத்தலாமாம். வீட்டுக்குள்ளே மாட்டையும் கன்றையும் வைத்துக்கொள்வது நல்லதல்ல. அதனால் சீக்கிரமாக ஒரு கொட்டகை கட்டிவிடுவது அவசியம். ..மற்றவை நேரில்... அத்தைக்கு வணக்கம். ஸ்ரீதரன்'.

கடிதத்தின் தேதியைப் பார்த்தாள். இரண்டு தினங்களுக்கு முன் எழுதப்பட்டது. திருச்சி என்று தபால் முத்திரை கூறியது. திருச்சி டவுனுக்குச் சென்று அங்கிருந்து பட்டணத்துக்கு ரயில் பிடிக்கு முன்னர் அவசரமாகத் தபாலில் சேர்த்திருக்க வேண்டும். மாட்டுக் கொட்டகை பற்றிச் சிரத்தையுடன் எழுதிய மனிதர் அவளைப் பற்றி இரண்டு வார்த்தை நலம் விசாரிக்கவில்லையே!

சில ஆண்கள் ரொம்பப் புத்திசாலித்தனமாகக் கடிதத்தில் எதையுமே எழுதிச் சிக்கலில் மாட்டிக் கொள்ள மாட்டார்கள் என்று அப்பா சொல்வாரே... அந்த வகையைச் சேர்ந்தவரா ஸ்ரீதரன். மறைமுகமாகக் காதல் மொழியைப் பேசி, பார்வையில் கனிவை அள்ளி வீசி, பட்டும் படாமலும் நடந்துகொண்டு சமயம் வந்தபோது ஒதுங்கிக் கொள்ளத் திட்டமிடும் தந்திரமா இது?

அதற்கு மேல் ஜகதாவால் ஆவலைக் கட்டுப்படுத்த இயலவில்லை.

''கடிதாசி எங்கிருந்து வந்திருக்கு? அத்தான் குமரேசன் கிட்டே இருந்தா கணேச தம்பி எழுதியிருக்கா?'' — மெல்லக் கேட்டாள்.

''டாக்டர் ஸ்ரீதரன் எழுதியிருக்கார். மாட்டுக் கொட்டகை கட்டற விஷயமா சிலரை விசாரித்தாராம். ரொம்பப் பணம் பிடிக்கும்னு சொன்னாங்களாம்....''

அத்தைக்குப் பெருத்த ஏமாற்றம். மாட்டுக் கொட்டகை கட்டுவதில் அக்கறை காட்டும் இந்தப் பையன் இந்தப் பெண் கழுத்தில் ஒரு தாலியைக் கட்டறதைப் பத்திச் சீக்கிரம் ஏன் அக்கறை எடுக்கவில்லை..?

''வேறே எதுவும் எழுதலையா?'' தன் ஏமாற்றத்தை மறைக்கக் கேட்டு வைத்தாள்.

''என்ன சார், டேப் ரெக்கார்டுலே, ஒரே 'ஹாய், ஹூய்' சத்தமா இருக்கே!''

''அதுவா? வெயில்லே காயப் போட்ட வடகம் வத்தலைக் காக்காய் கொத்திட்டுப் போயிடாம, விரட்டறத்துக்காகத்தான் அப்படி ரெக்கார்டு பண்ணி வச்சிருக்கேன்!''

- ஜி. நடராஜன்



''இது என்ன உலக மகா ரகசியமா... நீங்களே படிச்சுப் பாருங்க. டாக்டர் தமிழில் தான் எழுதியிருக்கார்.'' வெடுக்கென்று எழுந்து சென்று கடிதத்தை அத்தையருகே குறட்டின் மீது சந்தியா வைத்தாள்.

அவளுக்குள்ளேயும் ஒரு பெருத்த ஏமாற்றம். இத்தனை நெருக்கமாகப் பழகிய மனிதனுக்கு அன்பாக ஒரு வார்த்தை எழுதத் தெரியவில்லையா? இதென்ன சூழ்ச்சி?

ஆமாம்! இதுவரை அவர் வெளிப்படையாகத் தமது உள்ளத்து உண்மையைப் பற்றி எதுவுமே சொன்னதில்லையே? ஒருசமயம் அவளாக ஊகித்துக் கொண்டதுதானா? அவளுடன் அவர் நேச பாவத்துடன் — ஒரு சிநேகிதன் என்கிற முறையில் பழகினாரோ? அப்படியென்றால் ஏன் இரு பொருள் படப் பேச வேண்டும்? மென்மையாக அவளுடன் கலந்து சிரிக்க வேண்டும்? டாக்டர் பட்டத்துக்குப் படிச்சவர்—மனவியல் தெரிந்த புத்திசாலியாச்சே?...

உதட்டைக் கடித்துக் கொண்டு உணர்ச்சிகளை அழுத்திக் கொண்டு தன் குறிப்புப் புத்தகத்தினுள் மூழ்கிப் போனாள் அவள். ஆனாலும் ஏமாற்றப்பட்டு விட்டதைப் போன்றதொரு வெறுமையான உணர்வு. சற்று முன் தனக்கெதிரே தெரிந்த வெளிச்சத்தைத் திடீரென்று இருள் கப்பிக்கொண்டு விட்ட பிரமை. அழ முடியாது ஆழமாக நெஞ்சை இறுக்கிய ஒரு சோகம். அன்று முழுதும் மரண அடி பட்ட மான்போல் துடியாகத் துடித்தபடி அவள் அத்தைக்குச் சமையல் அறையிலும் வீட்டு வேலைகளிலும் கூட உதவிக் கொண்டிருந்தாள்.

மறுநாள் காலைதான் அந்த நினைப்பு வந்தது. ஆங்கில காலண்டர் நாள்படி அத்தை கணவர் மருதீசன் இறந்துபோன நாள். வழக்கமாக அத்தை அன்று காலை அனவரதேஸ்வரருக்கு அபிஷேக ஆராதனை செய்ய ஏற்பாடு செய்துவிட்டு ஏழைகளுக்குக் கோயில் மூலம் அன்னதானம் செய்வது வழக்கம். அத்தை சமையலறையே கதியாக இருந்தாள்.

''மறந்துட்டீங்களா அத்தை— இன்னிக்கு மாமனின் அவர்களின் நினைவு நாளாச்சே...''

சந்தியா முடிப்பதற்குள் அத்தை குறுக்கிட்டாள். ''ரெண்டு நாள் முன் அவர் திதி வந்தது. புரோகிதரைக் கூப்பிட்டு ரொம்ப எளிமையா செய்து முடிச்சுட்டேன். முந்தா நேத்தே மாரப்பனோட கடைத் தெருவுக்குப் போய் அவன் மூத்த மகனுக்குப் பள்ளிக்கூடத்துக்கு வேண்டிய புத்தகம், நோட்டுக்களைப் பதினஞ்சு ரூபாய்க்கு வாங்கித் தந்துட்டேன். — கல்விக்குத் தானம் செய்யறதும் நல்லதுதானேன்னு இந்த வாட்டி இப்படி முடிச்சுட்டேன்.''

'' 'அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல் ஆலயம் பதினாயிரம் நாட்டல்... அன்ன யாவினும் புண்ணியம் கோடி ஆங்கோர் ஏழைக்கெழுத்தறிவித்தல்.' என்பது பாரதி சொன்னது. இந்த ஆண்டு உங்களுக்கும் நினைப்பு வந்துட்டதாக்கும். அத்தை! பலே...'' என்று புன்முறுவலித்தாள் சந்தியா.

''தொட்டுத் தொட்டு நமக்குச் செலவுகள் பல வந்துக்கிட்டே இருக்கு. பலசரக்குக் கடை பாக்கி கொஞ்சம் தங்கி நிக்குது. அதனாலே இப்படி இருக்கட்டும்னு...'' அத்தை மேலே பேசத் தயங்கினாள்.

''எனக்கு உபதேசம் செய்துவிட்டு நீங்க அந்தத் துணிவை இப்போ இழக்கலாமா அத்தை..எவ்வளவு தூரம் நம்மால் போராட முடியும்னு இதுகளை ஒரு சவாலா ஏத்துக்க வேணுமா...'' சந்தியா சிரிக்க முயன்றாள். ஆனால் மனத்தில் சிந்தனைகள் அலைபாய்ந்தன.

''நான் போய் அண்ணன் உயிரோட இருந்திருந்தால் நிலைமை வேறாக இருந்திருக்கும். இந்த வீடு. தோட்டம் — கல்யாணமாகாத ஒரு பெண் — இத்தனை பொறுப்பும் ஒரு பூதமாக என்னைப் பயமுறுத்துதே... ஈஸ்வரா...'' அத்தை உள்ளூற குமைந்தாள்.

மறு நாள் காலை பள்ளிக்கூடம் துவங்கிய பின்னர் சிறிது நேரத்தில் பியூன் அவள் வகுப்பறைக்குள் வந்து தாழ்ந்த குரலில் சொன்னான்:

''பெரியம்மா... வகுப்பைப் பத்து நிமிஷம் விட்டுவிட்டு அவங்க அறைக்கு உங்களை அவசரமா வரச் சொன்னாங்க.''

எதற்காக தலைவி அவளை நடுவகுப்பிலிருந்து அழைக்கிறாள்? — கலவரத்துடன் அவள் வராந்தாவில் வேகமாக நடந்து மெள்ளத் தலைவியின் அறைக் கதவை விரல்களால் தட்டிவிட்டு உள்ளே சென்றாள்.

கடுமை தெரிந்த முகத்துடன் கால் மேல் கால் போட்டுக் கொண்டு மிடுக்காக நாற்காலியில் சாய்ந்து கொண்டிருந்த பள்ளித் தலைவி அவளைக் கண்டதும் நிமிர்ந்தாள். கண்களில் நெருப்புத் தெரிந்தது. எதிரே நின்றவளைக் காலோடு தலை மெள்ள ஒருமுறை பார்த்தாள். ''கதவைச் சாத்திவிட்டு இப்படி வந்து நில்லு. உன்கிட்ட முக்கியமா ஒரு விஷயம் பேசணும்.''—அதிகாரமாக அதட்டினாள்.

(தொடரும்)



வேலைக்காரன்: என்ன முதலாளி என் மேலேயே உங்களுக்கு நம்பிக்கை இல்லையே....!''

முதலாளி: நம்பிக்கை இல்லையா?... நம்பிக்கை இல்லாமலா என் வீட்டு பீரோசாவிக்கொத்தையே உன் கிட்டக் கொடுத்திருக்கேன்....?

வேலைக்காரன்: ஒரு சாவியும் பீரோவில நுழைய மாட்டேங்குதே! அதனாலதான் கேட்டேன்.! - பட்டுக்கோட்டை ரவி



கல்லில் மலர்ந்த காவியம்: 12

# திருமெய்யம்

பாண்டி நாட்டில் காரைக்குடிக்கும், புதுக்கோட்டைக்கும் மத்தியில் உள்ள திருமெய்யம், திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப்பெற்ற திருப்பதி. தற்பொழுது திருமயம் என வழங்கும். இங்கு சத்தியமூர்த்திப் பெருமாளுக்கும், சத்தியகிரீச்வரருக்கும் ஒரே மலையில் குடை வரைக் (Rock-cut) கோயில்கள் உள்ளன.

சத்தியமூர்த்திப் பெருமாள், மலையிலேயே செதுக்கப் பெற்ற சயனமூர்த்தி. திருமுடியும், ஆடை ஆபரண அலங்காரங்களும் வேறெங்கும் காணக் கிடைக்காதவை. பெருமாளுடைய யோக ஹஸ்தம் ஓர் அற்புதப் படைப்பு.

பின்னணியில் கின்னரர்—கிம்புருடர் முதலிய தேவகணங்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்கின்றனர். தலைப்புறம் கருடனும் பூதேவியும், கால்மாட்டில் ஸ்ரீதேவியும், மதுனகடவர்களும் காட்சி தருகின்றனர்.

முன்புறம் உலோகத்தாலான உற்சவ மூர்த்திகள் ராஜகோபாலன், பெருமாள், கிருஷ்ணன், விளக்கு நாச்சியார் ஆகியோர் நிற்கின்றனர்.

சங்கு சக்ரதாரியாக அபய ஹஸ்தம் காட்டி திருமகளை அணைத்த கோலத்தில் வீற்றிருக்கும் லட்சுமி நரசிம்மனைச் சிலாமூர்த்தியாகத் தரிசனம் செய்கிறோம்.

நமது முன்னோர்கள் நமக்குப் பரம்பரைச் சொத்தாக அளித்துவிட்டுச் சென்றுள்ளது இந்தக் கலைப் பொக்கிஷங்கள். இன்றைய மதிப்பீட்டில் இச் சிற்பங்கள் பல கோடி ரூபாய்க்குச் சமம். இந்த அரிய பொக்கிஷத்தைக் கட்டிக் காப்பாற்றிப் போற்றி, வரும் தலைமுறையினருக்கு அளிப்பது நம் கடமை; நமது பண்பு.

தலைமுறை தலைமுறையாக வந்த கலைப் படைப்பின் அடிப்படை தூய்மை என்னும் பக்தியும், நேர்மை என்னும் சக்தியும் தான்! அந்த அடிச்சுவட்டைப் பின்பற்றுவது நமது லக்ஷ்மி மில்ஸ். "செய்யும் தொழிலே தெய்வம்; அதில் நேர்மையே எங்கள் செல்வம்" என்ற குறிக்கோளுடன் மக்களுக்குச் சேவை செய்வதையே தனது தலையாய கடமையாகக் கொண்டு விளங்குவது நமது லக்ஷ்மி மில்ஸ்!

# தாய்



"அம்மா''—

''என்ன இந்துக்குட்டி?''—

''என்னம்மா பண்ணிட்டு இருக்கீங்க?''—

''ஒரு க்ளயண்டோட முக்கியமான விஷயம் பேச வேண்டியிருக்கு. அதுக்காக பாயிண்ட்ஸ் தயாரிச்சிக்கிட்டு இருக்கேன்... என்ன வேணும்மா?''—

''இல்லேம்மா... வந்து...''

''சொல்லு டார்லிங். அம்மாக்கு நாழியாவுது பாரு....''

''நாளன்னிக்கு எங்க ஸ்கூல்ல ஸ்போர்ட்ஸ் டே மம்மி... நீங்களும், டாடியும் வரணும் மம்மி,...''

''நாளன்னிக்கா? ஏழாம் தேதியா? சாயங்காலமா? ஸாரிடா— அன்னிக்கு போர்ட் மீட்டிங் இருக்கு.முடிய ஏழு, எட்டு ஆயிடுமேடா, ஏன் முன்னுலேயே சொல்லலே? ம்? அப்பாவுக்கும் வரமுடியாதே!''

''ப்ளீஸ் மம்மி... எல்லார் அப்பா, அம்மாவும் வருவாங்க மம்மி....''

''முடிஞ்சா வரமாட்டேனு இந்தும்மா? மறுநாள் ஸண்டேதானே? அன்னிக்கு நீயும்நானும் 'சோழா'வுக்குப் போய் ஒண்ணு ஸ்விம் பண்ணிட்டுச் சாப்பிட்டுட்டு வரலாம். ஓ.கே?''—

''ப்ராமிஸ்?''

''ப்ராமிஸ் — இப்ப அம்மாவைத் தனியா விட்டுட்டு ஓடிடுடா...''

''மம்மி.''

''எஸ் இந்து?''—

''வெளியே போகப் போறீங்களா?''—

''ம்ம் — ரோட்டரி கூட்டத்திலே விமன் ஆஃப் இண்டியாவைப் பத்திப் பேசப் போறேன்.''—

''மாலே போடுவாங்களா?''

''போடுவாங்கடா''—

''அப்பாவும் வர்றாரும்மா?''—

''வரார் ஸ்வீட் ஹார்ட்...''

''நான்.... நானும் வரட்டுமா?''—

''இது பெரியவங்க கூட்டம் இந்து. உனக்கு போரடிக்கும்.உமாவை விட்டு உன்னே பீச்சுக்கு அழைச்சுக்கிட்டுப் போகச் சொல்றேன். ஹவ் அபௌட் ஐஸ்கிரீம்?''

''உங்க மடியில நான் உட்கார்ந்துக்கட்டுமாம்மா?''



''வேணும் டார்லிங்... புடவை கசங்கிடும். விட்டு வா... அம்மா உனக்கு ஒரு கட்டி முத்தாக் கொடுக்கறேன்... உமா, இவளை அழைச்சிட்டு பீச்சுக்குப் போயிட்டு, வரப்போ தாஸப் பிரகாஷ் ஐஸ்கிரீம் வாங்கிக் கொடு, என்ன?''

**"இ**ந்து தூங்கிட்டாளா உமா?''—

''இப்பத்தான் படுக்க வைச்சேன். நன்னி கேட்டா, எடுக்க வந்தேன்....''

''அந்த டம்ளரை எங்கிட்டக் கொடு. நான் எடுத்துக்கிட்டுப் போறேன்.''

''ஹாய் மம்மி...''

''இன்னிக்கு உனக்கு ஜோரா ஒரு கதை சொல்லப் போறேன்....''

''ஹைய்யா... மம்மி... என் ம...ம்...மி''

''ஓ.கே. ஓ. கே. கழுத்தை விடுடா... படு... படுத்தாச்சா?... ஒரு ஊர்ல ஜாக் ஜாக்னு ஒரு பையனும். அவனுக்கு ஒரு அம்மாவாம்.''

''மம்மி... நீங்க ரொம்ப அழகா இருக்கீங்க....''

''தாங்க்ஸ்டா கண்ணு — நீயும்தான் கொள்ளை அழகு... சரி... பேசாம கதையைக் கேளு...அந்தப்பையன் ஒரு நாள்... என்ன உமா?''

''மிஸ்டர் ராமன் போன்ல கூப்பிடறார். அர்ஜண்டாப் பேசணுமாம்.''

''பத்து நிமிஷம் கழிச்சு நான் பேசறேன்னு சொல்லேன்... இரு. நானே வரேன்.''—

''கதை மம்மி?''—

''மிஸ்டர் ராமன் ஒரு முக்கியமான க்ளயண்ட் இந்து. அவசியம் இல்லாட்டிக் கூப்பிட மாட்டார். இன்னொரு நாள் அம்மா கதை சொல்றேன்...குட்நைட் டார்லிங்...''

**"ஜோ**க் ரொம்ப நல்லாஇருக்கு மாலினி.. வாங்கினதா இல்லே, வீட்ல செய்ததா?''

''வாங்கினதுதான் ராஜி.. வீட்டுல செய்ய நேரம் எங்கே?''

''எம். பி. ஏ. படிச்சுட்டு ஹஸ்பண்ட் கூடவே ஆபீஸ்லேயும், பார்ட்னரா இருந்து எல்லாத்தையும் கவனிச்சுக்கறே — நேரம் இருக்காதுதான்... ஆம் பிள்ளைக்குச் சரியா பெரிய வேலேயும் பார்த்துக்கிட்டு வீட்டையும் இத்தனை அழகா நீ எப்படித்தான் கவனிக்கிறியோ... என்னால முடியாதும்மா...''

# சிவசங்கரி





''கஷ்டமாத்தான் இருக்கு.... ஆனாலும், நம்ம வீட்டு வேலைய நாம் தானே கவனிக் கணும்?''

''இதான் உன் பெண்ணு?''—

''இந்து! — குளிச்சிட்டு வந்திட்டியா... இங்க வா டார்லிங் லே ஹல்லோ டு ஆண்ட்டி இது அவங்க டாட்டர் அனுராதா... அழைச் சிட்டுப் போய் விளையாடுடா...''

"இந்தப் பொம்மை மாதிரி நான் பார்த் ததே இல்லே — இந்து...''

''எங்கப்பா லண்டன்லேந்து வாங்கிட்டு வந்தார்....''

''அந்த விடு?''—

''அது பம்பாயிலே வாங்கினது... உன் ஃப்ராக்லே இது என்ன பொம்மையா?''—

''எங்கம்மாவே எம்ப்ராய்டரி பண்ணித் தைச்சது.''

''உங்கம்மாவேவா?''

''ஆமா. என் ஃப்ராக்ஸ் எல்லாம் அம் மாவே தைப்பாங்க. ரொம்ப நல்லவங்க.''

''எங்கம்மாவும்தான் நல்லவங்க. ரொம்ப கெட்டிக்காரங்க... ஆபீஸ்ல அப்பா மாதிரி எங்கம்மாவும் வேலே பண்றாங்களே...''

''எங்கம்மா கேக் பண்ணுவாங்க... என் னோட பீச்சுக்கு வருவாங்க... என்னைக் குளிப்பாட்டி, ட்ரெஸ் பண்ணுவாங்க... கதை சொல்லுவாங்க... எப்பவும் என் கூடவே இருப்பாங்களே....''

''எங்கம்மாவும்தான் கதை சொல்லு வாங்க... ஆமா, வந்து உங்கம்மா எப்ப வுமே உன் கூடவே இருப்பாங்களா அனு?''

''எ...ப்...ப...வு...ம்...''

"உமா, டாக்டர் வந்திருக்கார்னு சொல்லி இந்துவைக் கூட்டிட்டு வா... என்னவோ தெரியலே டாக்டர், ஒரு வாரமா இந்து சரியாவே இல்லே. எது கேட்டாலும் சரியாப் பதில் சொல்றது இல்லே.. 'ம்'முனு இருக்கா..''

''சுந்தர் எங்கே?''

''அவர் ஊர்லே இல்லே டாக்டர். ஒரு செமினருக்காக கல்கத்தா போயிருக்கார். நாளைக்குவந்திருவார்....கூப்பிட்டா வராளா பாருங்க. இந்து....''

வந்தவர்: ''என்னப்பா கம்பவுண்டர் தலைவலி யுன்னாலும் ஒரே மாத்திரை, நெஞ்சு வலியுன் னாலும் ஒரே மாத்திரை, வயித்து வலியுன்னா லும் ஒரே மாத்திரையைத் தர்றே''

கம்பவுண்டர்: ''வலிகள் வேறுவேறு இருந்தா லும் உடம்பு என்னவோ ஒண்ணுதானே ஸார்''

-சரஸ்வதி பஞ்சு



''வந்துட்டேன் மம்மி...''

''என்னம்மா பண்ணிட்டு இருந்தே? உன் னைச் செக் அப் பண்ண டாக்டர் அங்கிள் வந்திருக்கார், லே, குட் மார்னிங்.''

''குட் மார்னிங்.''—

''குட் மார்னிங் இந்து இப்படி வா... ஆ... சொல்லு'' —

''ஆ....''

''இங்கே வலிக்குதா? இங்கே?''

''ம்ஹூம். இல்லே....''

''என் பக்கத்திலே உட்காரு. அடேயப்பா என்னமா வளர்ந்துட்டம்மா! உன்னை இத் துனூண்டு குழந்தையா வெளியே எடுத்துப் போட்டவன் நான்தான். தெரியுமா?''

''அம்மா தொப்பையிலேந்து என்னை வெளில எடுத்தது நீங்கதானா அங்கிள்?''

''நானேதான்.''

''எப்படி எடுத்திங்க? அம்மா தொப்பைல ஜிப் இருக்கா... திறந்து எடுத்திங்களா?''—

''அது... அ....அப்படி இல்லே இந்து... அதை விளக்கிச் சொன்னா உனக்கு இப்பப் புரியாதும்மா...''

''டாக்டர்படிப்பு படிச்சாதான் புரியுமா?''

''ம் — ஆமா — பெருமூச்சு விடு... திரும்பு''

''அங்கிள்''—

''என்னம்மா?''—

''வந்து... வந்து.... தொப்பையிலேந்து எடுக்கற மாதிரி திரும்பத் தொப்பைக் குள் ளியே என்னை வச்சிட முடியுமா?''

''ஆ? அது எப்படி முடியும் இந்து?''—

''ஏன் முடியாது அங்கிள்?''

''இப்ப நீ பெரிசா வளர்ந்திட்டியே!''—

''மருந்து கொடுத்துப் பெரியவளைச் சின் னப் பாப்பாவா சுருக்க முடியாது?''

''ம்ஹூம். முடியாது...''

''ஏன் முடியாது?''

''வந்து... அ... இன்னும் அந்த மருந்தை யாரும் கண்டு பிடிக்கலேயே.''

''நீங்க பெரிய டாக்டர்னு மம்மி சொல் வாங்களே, நீங்ககூடக் கண்டு பிடிக்கலையா அங்கிள்? சுருக்கக் கண்டு பிடிச்சு அந்த மருந்தை எனக்குக் கொடுத்துத் திரும்ப அம்மா தொப்பைக்குள்ள போக வைச்சிடுங்க அங்கிள். அப்பத்தான் அம்மாவோட எப்பவும் என்னால இருக்க முடியும். ப்ளீஸ் அங்கிள் ப்ளீஸ்....''

கெஞ்சலாக, ஆனால் தீவிரமாக இந்து பேசி நிறுத்த, மாலினி திடுக்கிட்டுப்போனாள். இந்துவின் உடம்பில் கோளாறு இல்லே. மனசில்தான் என்பது அப்பட்டமாகப் புரிய எதிரில் அமர்ந்திருந்த டாக்டரை ஒரு கணம் வெறித்துவிட்டுப்பார்வையைத் தழைத்தாள்.

சில நிமிஷங்கள் மௌனித்து, யோசித்து, நாளைக்கு சுந்தர் கல்கத்தாவிலிருந்து வந்த தும் சொல்ல வேண்டியது என்ன என்பதைத் தீர்மானித்து விட்டவளாய், மகளை எட்டிப் பிடித்து இழுத்து, ''புடவை கசங்கினப் பரவாயில்லே. அம்மா மடி மேலே உட் காருடா...'' என்று மெதுவாக அவள் கூற அதை நம்ப முடியாதது போல இந்து கண் களை விரித்தாள். அப்புறம், 'ஐ லவ் யூ மம்மி' என்று சொல்லி அழுந்தத் தாயைக் கட்டி, முத்தமிட்டாள்.

# புத்துணர்ச்சி தரும் தூய சுவாசம்...
# உறுதிமிக்க, ஆரோக்கியமான பற்கள்



## அளித்திடுதே கோல்கேட் டென்டல் க்ரீம்

ஒவ்வொரு சாப்பாட்டிற்குப் பிறகும் கோல்கேட் கொண்டு உங்கள் பற்களைப் பிரஷ் செய்யுங்கள். உலகெங்கும் பல் டாக்டர்கள் சிபாரிசு செய்வதைப் போலவே அது உங்களைப் பாதுகாக்கிறது.

உங்கள் பற்களுக்கிடையே தங்கியுள்ள உணவுத் துணுக்குகளில் பாக்டீரியாக்கள் வளர்கின்றன. இவை வாய் துர்நாற்றத்தையும், பிறகு வலிமிக்க பற்சிதைவையும் உண்டாக்கும்.

எனவே சாப்பிட்டு முடித்தவுடனேயே கோல்கேட் முறையில் பற்களைப் பிரஷ் செய்யுங்கள். அது புத்துணர்ச்சியுடன் இனிய சுவாசத்தைத் தருவதற்கும், பற்களுக்கு வெண்மையளிப்பதற்கும், பற்சிதைவை எதிர்ப்பதற்கும் மிகவும் சக்தி வாய்ந்தது என்று நிரூபணமாகியுள்ளது.

**கோல்கேட்டின் புத்துணர்ச்சி தரும், பெப்பர்மின்ட் சுவை பல்துலக்குவதை ஒரு இன்ப அனுபவமாக்குகிறது.**

**நம்பகமான, கோல்கேட்டின் செயல் புரியும் முறை**



உணவுத் துணுக்குகள் பற்களுக்கிடையே சிக்கிக் கொள்வதால் துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் உண்டாக்கும் பாக்டீரியாக்கள் வளருகின்றன.



கோல்கேட்டின் ஒப்பற்ற, செயல்புரியும் நுரை ஆழ ஊடுருவிச் சென்று உபாதை தரும் உணவுத் துணுக்குகளையும் பாக்டீரியாக்களையும் அகற்றி விடுகிறது.



பயன்: கவர்ச்சிமிக்க வெண்மையான பற்கள், தன்னம்பிக்கை தரும் இனிய சுவாசம், பற்சிதைவுக்கெதிரான பாதுகாப்பு.

## கோல்கேட் டென்டல் க்ரீம் உபயோகித்து வாய்துர்நாற்றத்தைத் தடுத்திடுங்கள் பற்சிதைவை எதிர்த்திடுங்கள்




DC-G-74 TM

சிலிண்டரில் காகிதத்தைநுழைத்து டியர் ஸாரை ஆரம்பித்தபோது டெலிபோன் கூப்பிட்டது. குடித்துவிட்டு ரோட்டில் தள்ளாடிக் கொண்டு வந்த கணவன் காரில் அடிபட்டு விட்டான்.

''ஹாஸ்பிட்டலில் சேர்த்திருக்கிறதா? இதோ வருகிறேன்.''

குலுக்கி எடுத்தது ஆட்டோ. இப்படிக் குலுக்கலும் அதிர்ச்சியுமாகத்தான் இரண்டு வருடத் தாம்பத்தியம் ஓடிற்று. கல்யாணத்துக்கு முன்னரே ஒரு சின்னக் கசப்பு மனத்துள் நிழலிட்டு விட்டது. வரதட்சிணை பேரத்தில் வியாபாரி போல் பேசினான் அவன். அப்பாவுக்குத் தட்ட முடியவில்லை. கொடுக்கவும் முடியவில்லை. முழி பிதுங்க மூச்சுத் திணற எப்படியோ புரட்டிக் கொண்டு வந்தார். அத்தனை உயரமும் படிப்பும் ஞானமும் பொலிந்த அப்பா பைசா விஷயத்தில் குறுகிப்போய் அவன் காலில் விழுந்த கசப்பு. நான்கு வேதமும் ஆறு சாஸ்திரமும் கரைத்துக் குடித்தவர் அப்பா. வேதத்தை வெறுமனே பொட்டை உருப்போட்டு, தவளைக் கூச்சலாய் இரைத்தபடி வாழ்ந்திருக்கவில்லை அவர். தான் படித்ததை ஆங்கிலத்தில் அடுத்த தேசத்துக்காரனுக்கு எடுத்துச் சொன்னார். வருடத்திற்கு இரண்டு வெள்ளைக்காரர்கள் வாசல் குரட்டில் உட்கார்ந்து ஆறு மாதத்திற்குப் பாடம் கேட்பதுண்டு.

அவனுடைய பேரம் இம்சையாய் உறுத்தத் துவங்கியபோது அவர் சொல்லிக் கொடுக்கும் பாடத்திலிருந்தே ஒரு பத்தியைப் பிடித்துக் கொண்டு எதிர்வழக்காடிப் பார்த்தாள் விமலா.

''கல்யாணம் என்பது கன்னிகாதானம். தானம் வாங்கிக் கொள்கிறவன்தான் தாழ்ந்துபோகிறவன். தானம் வாங்கிக்கொள்வதன் மூலம் ஒரு தோஷத்தை அடைகிறவன். அந்தத் தோஷத்தைப் போக்கிக் கொள்ள அவன்தானே பணம் கொடுக்க வேண்டும்?'' என்று கேள்வி கேட்டாள். ''இந்தக் காலத்தில் கல்வி வேறு கடமை வேறு'' என்று சொல்லிக் கொண்டு அப்பா கல்யாணத்தில் தீவிரமாக முனைந்துவிட்டார்.

திருமணத்துக்குப் பின் கசப்பு விசுவரூபம் எடுத்தது. முதலில் எங்கோ வேலை பார்ப்பதாகச் சொன்னவன், கடைசியில் வேலையே இல்லை என்பதை ஒப்புக் கொண்டான். அவனது உண்மையான குணங்கள் கொஞ்சம் கொஞ்சமாக வெளிப்பட, தன் ஏமாற்றங்களை, கஷ்டங்களை விழுங்கிக் கொண்டாள் விமலா. அப்பாவைக் குறுக அடித்த துக்கம், பொய் சொல்லிக் கைப்பிடித்த ஏமாற்றம், சோற்றுக்குத் தன்னைச் சார்ந்திருந்த வெட்கம் எல்லாவற்றையும் விழுங்கிக்கொள்ள முடிந்தது. ஊசியாய்ச் செருகிய வார்த்தைகளைத் தான் ஜீரணிக்க முடியவில்லை. கையொடிய டைப் தட்டி, ஓவர் டைம் சம்பாதித்து, ஆபீஸிலிருந்து லேட்டாக வந்தால், 'யாருடன் சுற்றிவிட்டு வருகிறாய்?' என்றகேள்வி அவளைத் தேள் கொடுக்காகக் கொட்டும்.

அவசர அவசரமாக ஆஸ்பத்திரி சென்றவளுக்குக் கணவனின் உடலைத்தான் பார்க்க முடிந்தது.

காரியங்கள் முடிந்து, அனுதாபங்கள் தீர்ந்துபோய், வாழ்க்கைக் குரல் கொடுத்தபோது, ஆபீஸிற்குக் கிளம்பத் தன்னைத் தயார்ப்படுத்திக் கொண்டாள் விமலா.

பரக்கப் பரக்கச் சமையல் முடித்து, அவசரமாய்க் குளித்து, புடவை மாற்றிக் கொண்டு ஒரு நிமிஷம் யோசித்துக் குங்குமச்



பொட்டை எடுத்து நெற்றிக்கு இட்டுக் கொண்டாள். கண்ணில் வலி தெரிய அவளையே பார்த்துக் கொண்டிருந்த அப்பா கத்த ஆரம்பித்தார்.

''என்ன காரியம் செய்கிறாய் விமலா! புத்தி சுவாதீனத்தில் இருக்கிறாயா?''

''என்ன நடந்து விட்டது என்று இப்படிக் கத்துகிறீர்கள்? இப்போது என்ன செய்து விட்டேன்?''

''இன்னும் என்ன செய்யணும்? உன் ஆத்துக்காரர் செத்து இன்னும் ஒரு மாதம் முழுசா ஆகவில்லே! பொட்டு வச்சுக்கிறாயே நீ! இது அடுக்குமா?''

''ஏம்ப்பா! இப்ப நான் குங்குமம் வைச்சுக்காமல் இருந்தால் செத்துப் போனவர் திரும்பி வந்துடுவாரா?''

''ஸ்டாப் இட்! இது விதண்டா வாதம்.''

''கல்யாணம் ஆகி கணவன்னு ஒருத்தர் வந்த பின்தான் ஒரு பெண் குங்குமம் வைத்துக்கொள்கிறாளா என்ன? பிறந்ததில் இருந்து விவரம் அறிந்த நாளில் இருந்து, வைத்துக் கொள்வதில்லையா? இடையில் வந்த அவர் போன பின் நான் ஆதியில் இருந்து வரும் பழக்கத்தை ஏன் விட்டு விட வேண்டும்?''

''உனக்குச் சொல்லித் தெரிய வேண்டியதில்லே. கைம்பெண்கள் பொட்டு, பூ வைச்சுக்கக் கூடாது என்பது நம் சாஸ்திரம்.''

''சாஸ்திரம்! உங்கள் மாப்பிள்ளை சாஸ்திரப்படி தான் நடந்துண்டாரோ? கட்டின பெண்டாட்டியைக் கொடுமைப் படுத்த



னும்னு சாஸ்திரத்தில் சொல்லியிருக்கா? மனத்தாலும், உடலாலும், பொருளாலும் ஒரு பெண்ணுக்குத் துணையாயிருந்த ஆண் மறைந்த பின், அவனைக் கௌரவப்படுத்தும் பொருட்டு, பெண் தன் சகல அலங்காரங்களையும் அந்தக் குங்குமத்தை, பூவைத் துறந்துவிட வேண்டும் என்பது சாஸ்திரம். என் விஷயத்தில் உங்க மாப்பிள்ளை எந்த விதத்திலும் எனக்குத் துணையாயில்லை. பாதுகாப்பாக இல்லை.''

''மேலே பேசிக் கொண்டே போகாதே விமலா. சாஸ்திரம் சொல்வதற்கு உட்பொருள் ஒன்று உண்டு. குங்குமம், பூ வைத்துக் கொண்டால், பெண்ணின் அழகு துலங்கும். அதைப் பார்த்து ஆண்கள் மனம் சலனமடையலாம். அந்தக் கைம்பெண்ணும் சலனமடைந்து மனத் தூய்மையை இழக்கலாம். சமூக ஒழுக்கம் கருதியே கணவனை இழந்தவர்கள் குங்குமம், பூ வைத்துக் கொள்ளக் கூடாது என்று பழக்கப்படுத்தியிருக்கிறார்கள்.''

''அப்பா! கவலைப்படாதீர்கள். என்மேல் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. இந்த நம்பிக்கையும், சுய கௌரவமும், நீங்கள் புகட்டிய கல்வியும் என்னைச் சலனங்களில் இருந்து காப்பாற்றும். தலை கவிழ்ந்து விடாமல், கால் சறுக்கி விடாமல் நடத்திச் செல்லும். உங்களுக்கோ, எனக்கோ அகௌரவம் நேர்கிறாற்போல் ஒருபொழுதும் நடந்துகொள்ள மாட்டேன் அப்பா.'' அழகாக, வட்டமாக, பொட்டை வைத்துக் கொண்டு ஆபீஸுக்குக் கிளம்பி விட்டாள் விமலா.

---



## நான் பயின்ற துறை:

# கூட்டுறவே நாட்டுயர்வு!


முகவரி : மு. பழனிசாமி, த/பெ. முருகசாமி, தேவரடியார்க்குப்பம், முருக்கம் பாடி (அஞ்சல்), வழி மணலூர்ப் பேட்டை, தெ.ஆ. மாவட்டம்-605754

பிறந்த தேதி: 27-2-52

கல்வித் தகுதி: இளங்கலை (பொருளாதாரம்) - 1972; கூட்டுறவுத் துறை மேற்பயிற்சியாளர் சான்றிதழ் படிப்பு - 1979.


**வ**ங்கியில் எளிதில் வேலை கிடைக்கிறது என்பதால் பொருளாதாரத்தை எனது பட்டப் படிப்பில் முதன்மைப் பாடமாகக் கொண்டு தேர்ந்தேன். ஆனால் வங்கிவேலை கிடைக்கவில்லை; இந்தப் பட்டப் படிப்புக்கு ஆசிரியர் பயிற்சியில் சேருவதற்குத் தகுதியில்லை என்பதையும் அறிந்து கொண்டேன்.

நானும் 1973ம் ஆண்டு கடலூர் வேலை வாய்ப்பு அலுவலகத்தில் பதிவு செய்து ஒழுங்காக அவ்வப்பொழுது புதுப்பித்து வருகின்றேன். அதன் பயன் வேலை கிடைக்காவிட்டாலும் முதல்வர் அறிவித்த படித்த வேலையற்ற பட்டதாரிக்கான உதவித்தொகை பெற உதவியது. இது விரும்பத் தக்கதல்ல என்றாலும் அவ்வப்போது போட்டித் தேர்வுக்குச் செலுத்த மற்றவர்களின் கையை எதிர்பாராமல் இருக்க அத்தொகை உதவுகிறது.

இந்த உதவித் தொகை தற்போது நிறுத்தி வைக்கப்பட்டுள்ளதாக வட்ட ஆட்சியர் தெரிவிக்கிறார். இதனால் இந்த உதவித் தொகையை எதிர் பார்த்து அஞ்சல் வழிக் கல்வித் தொடரில் முதுகலை வகுப்பில் சேர்ந்த என்போன்றோர் மேற்கொண்டு பல்கலைக் கழகத்துக்கு எவ்வாறு பணம் செலுத்துவது என்று தெரியாமல் திண்டாட வேண்டிய நிலையில் உள்ளோம்.

1973ல் வேலை வாய்ப்பகத்தில் பதிவு செய்திருந்தும் 1978ல்தான் கூட்டுறவு சர்க்கரை ஆலையிலிருந்து நேர் காணல் தேர்வுக்கு — பயிற்சி எழுத்தருக்கு அழைப்பு வந்திருந்தது. அப்போது அவர்கள் 'கூட்டுறவுத் துறை பற்றிய சிறப்புப் பயிற்சி பெற்றுள்ளாயா'? என வினவினர். கூட்டுறவுத் துறை மேற் பயிற்சியாளர் சான்றிதழ் படிப்பு படித்தால் எந்த வேலையாவது கிடைத்து விடும் எனவும் கூறினர். எனவே 1979ல் கூட்டுறவு மேற்பயிற்சியாளர் சான்றிதழ் படிப்பில் சேர்ந்து தேறினேன். இந்தப் பயிற்சியை முடித்த பிறகு மூன்று முறை பல்வேறு கூட்டுறவு அமைப்புக்களிலிருந்து நேர் காணல் தேர்வுக்கு அழைப்பு வந்திருந்து சென்றேன். எனினும் இன்னும்தான் வேலையற்ற பட்டதாரியாகவே இருக்கிறேன்.

''பொருளாதார வலிமையற்ற மக்கள் தங்களின் நலனை மேம்படுத்திக்கொள்ளத்தாங்களாகவே ஒன்றுகூடி ஏற்படுத்திக்கொள்ளும் ஒரு அமைப்பே கூட்டுறவு அமைப்பாகும்'' என்பது இத்துறையில் ஆரம்பப்பாடம்.

ஆனால் நம் நாட்டில் மக்கள், கூட்டுறவுத் துறையை இன்னமும் அரசின் அமைப்பாகவே கருதி வருகிறார்கள். இந்நிலை மாறி என்று மெய்யாலுமே அங்கத்தினர்களின் ஈடுபாடும் விழிப்புணர்வும் அதிகமாகி அரசின் கட்டுப்பாடுகள் குறைகிறதோ அன்றைக்குத்தான் கூட்டுறவுத்துறை வளம்பெற்று நற்பயனும் தரும்.


டு-இன்-ஒன்
போர்ஹென்ஸ்
டபிள்–ஆக்ஷன்
டூத்ப்ரஷ் உங்கள்
பற்களை சுத்தம்
செய்யும்போதே
ஈறுகளையும்
தேய்த்துக்
கொடுக்கிறது.
பற்களை சுத்தம் செய்யும் உறுதியான நீலக் குச்சங்கள்
ஈறுகளைத் தேய்த்துக் கொடுக்கும் மென்மையான வெள்ளைக் குச்சங்கள்
போர்ஹென்ஸ்
டு-இன்-ஒன்
டூத்ப்ரஷ்
அடல்ட்
மற்றும் ஜூனியர்

277 F-203 TAM




''சதீஷ்.... ஹஸ்பெண்டுன்னு முன்
னடி சொன்னேனே, அதை லிஸ்டி
லிருந்து அடிச்சுடுங்கோ!''




தந்தை: என்ன சுமி, உன் பாய்
ஃப்ரண்டை லிஸ்ட்லே சேர்த்துடச்
சொல்லட்டுமா''




உணவுப் பொருள் விநியோக அட்
டையைப் பெறுவதற்காகப் போராட்
டம்! முதற் படியாக தாசில்தார் அலுவ
லகம் நோக்கி நெடிய பயணம்! ஆயத்த
மாகுங்கள். ஆளுவோருக்கு அறை
கூவல் விடுப்போம்.''




''ஹி...ஹி... வணக்கமுங்க! வந்து
உங்க கார்டுலே அஞ்சு பேரை அதிக
மாகச் சேர்த்துடட்டுமா?... வந்து...
அப்படியே எனக்கு டிரான்ஸ்ஃபர் வாங்
கிக் கொடுக்கத் தயவு பண்ணணும்!''









ட, அசத்து! இவருக்கு இன்னும் கல்யாணமாகவில்லையாம்! நம்ம ரமாவை டிபன் கொண்டு வந்து கொடுத்து நமஸ்காரம் பண்ணச் சொல்லு! சீக்கிரம்... ஓடு! ஓடு!




''இன்னு சேட்டு... அரிசி ரவையெல்லாம் விக்க ஆரம்பிச்சுட்டே?''

''இன்னுப்பா பேஜாராப் போச்! அல்லாரும் குடும்ப கார்ட் நம்பன் கிட்ட அடகு வைக்குறான்! நம்பன் கார்டுக்கு அரிசி, ரவா வாங்கி விக்குறான்! 50 காசு ஜாஸ்தி. அல்லோ தான் லாபம்!''




(வருமான வரி அதிகாரியிடம்) ''உங்கள் வருமானம் என்ன?''



# விஞ்ஞானப் பக்கங்கள்




## இந்தியா விழா

லண்டனில் இந்தியாவிழா தொடர்கிறது. பல நிகழ்ச்சிகளில் ஒன்று இந்திய விஞ்ஞானக் கண்காட்சி.

நாம் விண்வெளிக்கு அனுப்பியுள்ள ஆப்பின் சாட்டலைட்டின் மாதிரி வடிவத்தைப் பார்வையிட்டார் பிரதமர், விழாத் துவக்கத்துக்குச் சென்றிருந்தபோது.

விஞ்ஞானக் கண்காட்சி மேல் நாட்டவர் துணையோடு நாம் அடைந்துள்ள நவீன முன்னேற்றங்களை மட்டுமின்றி நமது சரித்திர கால விஞ்ஞான அறிவையும் பெருமிதத்தோடு எடுத்துக் காட்டுகிறது.

வான சாஸ்திரப் பிரிவில் ஓர் அம்சத்தை ஆர்வத்துடன் பார்க்கும் சில மாணவர்களை இங்கு சந்திக்கிறீர்கள்.



## 'டென்ஷன்' விலக....

● பரபரப்பான வாழ்க்கை – டென்ஷன். சிலருக்கு மிகவும் உடலைப் பாதிக்கிறது. இதைத் தவிர்க்கவே உருவானது 'என்விரான்' என்ற இந்த அறை. இதனுள் சாய்வு நாற்காலியில் அமர்ந்தால் மணம் மிக்க பரிசுத்தமான காற்றுச் சூழும். மென்மையான வண்ணங்கள் கூரையில் இதமான சங்கீதத்துக்கு ஏற்பத் தாண்டவமாடும். சற்று நேரம் இதில் இருந்து விட்டு வந்தால் கவலைகள் பறந்துவிட வேலைகளைப் புதிய தெம்புடன் அணுகலாம். ஓர் அபெக்கத் தயாரிப்பு.



## விண்வெளி டெலஸ்கோப்



1985ல் விண்வெளிக்கு ஒரு டெலஸ்கோப்பை அமெரிக்கர்கள் அனுப்பப் போகிறார்கள். இதன் எடை 12 டன் இருக்கும். இதை இயக்க அங்கு மனிதர்கள் இருக்க மாட்டார்கள். தானியங்கு முறையில் செயல்படும். தொலை தூரத்தில் உள்ள மங்கலான நட்சத்திரங்கள் பலவற்றைப் பூமியிலிருந்து நமக்கு இன்னும் பார்க்க முடியவில்லை. அவற்றையெல்லாம் விண்வெளியில் உலகைச் சுற்றி வரக்கூடிய டெலஸ்கோப் பார்த்துத் தகவல்களைப் பூமிக்கு அனுப்பும். இந்த விண்வெளி தூரதர்சனியின் பிரதான நிலைக்கண்ணாடியின் முகம்தான் படத்தில் காண்பது. இன்னும் ரசாயனப் பூச்சுப் பெறவில்லை. சின்னச் சின்னக் கட்டம் போட்ட வடிவமைப்புடைய கண்ணாடியைத் துடைத்துப் பளபளப்பேற்றுகிறார்கள் பொறி இயலாளர்கள்.

## இந்தப் பறவை இன்று இல்லை!



ராட்சச அளவு. நீளமான கழுத்து. இறக்கைகள் விரிந்தால் முனைக்கு முனை 12 மீட்டர்! வாஷிங்டன் ஸ்மித்ஸோனியன் மியூஸியத்தில் உள்ள மாடல். நீண்ட நெடுங் காலத்துக்கு முன் வாழ்ந்த பறவை இது. விஞ்ஞானத்துக்கு இன்று தெரிந்த அளவில் இதை விடப் பெரிய பறவை சரித்திரத்தில் இல்லை. பெயர்? பயப்படாதீர்கள்: குவெட்ஸால்கோட்லஸ் நார்த்ரோபி! இந்தப் பெயரை எங்கே பிடித்தார்களோ விஞ்ஞானிகள்? புராதன மெக்ஸிகோவில் அஸ்டெக் மக்கள் வணங்கிய ஒரு பாம்புக் கடவுள் குவெட்ஸால் கோட்ல், பரிசோதனைக்கு உள்ளாகி வரும் சமீபத்திய விமானம் நார்த்ராப். இரண்டையும் இணைத்தார்கள். புராதனப் பறவைக்கு நூதனப் பெயர் சூட்டினார்கள்.

## மாரடைப்புக்குப் புது மருந்து

மாரடைப்பு நோயாளிகள் மறு முறை மாரடைப்பு ஏற்பட்டு மரணமடையும் ஆபத்தைப் பெரிதும் தடுக்கும் ஒரு மருந்துக்கு அமெரிக்க அரசு இசைவு அளித்திருக்கிறது. ஆண்டுதோறும் 3,50,000 பேர் அமெரிக்காவில் மாரடைப்புக்கு ஆளாகித் தப்பிப் பிழைக்கிறார்கள். ஆனால் இதில் ஏறத்தாழ நூற்றுக்குப் பதினைந்து பேர் இரண்டு ஆண்டுக்குள் 2வது தடவை மாரடைப்பு ஏற்பட்டு மாண்டு போகின்றனர். புதிய மருந்து இந்த 2வது மாரடைப்பு வருவோரில் மூன்றில் ஒரு பங்கினரைக் காப்பாற்றி விடுவதாகக் கணித்துள்ளனர். அதாவது ஆண்டுக்கு ஏறத் தாழ 17,000 பேர் உயிரிழக்காமல் தப்புவார்கள்.

புது மருந்தின் பெயர் 'டிமலால்' TIMOLOL ஒரு தடவை மாரடைப்பு வந்தவர்களுக்குத் தினமும் இரு முறை 'டிமலால்' மாத்திரை 33 மாதம் கொடுத்து வந்தார்கள். இவர்களுக்குத் திரும்ப மாரடைப்பு வரவில்லை. எவ்வளவு காலம் புது மருந்து சாப்பிடுகிறார்களோ அவ்வளவு காலம் மாரடைப்பினால் மரணம் விளைதல் தவிர்க்கப்படுவதாக மருத்துவர்கள் கருதுகிறார்கள்.

# கதிர்

ஸ்ரீமன்

நிலவின் இனிமையான ஒளிப்பொழிவில் கதிர்கள் தளதளத்து உறங்கிக் கொண்டிருந்தன.

இந்தக் கதிர் மாதிரிதான் தன்னை வளர்த்தாள் அத்தையம்மாள். அத்தனை கவனம். நாலிப் பயிர் முளைத்துக் கதிரானவரை காக்கும் ஜாக்கிரதை. இத்தனைக்கும்சொந்தப் பிள்ளை இல்லை. ஏதோ தூரத்து உறவு. கூடப் பிறந்த தம்பிக்கு இஷ்டமில்லை. எங்கே அக்காள் தாயில்லாத தன் மகளைப் புறக் கணிப்பாளோ — எல்லாம் மீறி அத்தையம்மாவிடம் வளர்ந்தவன். அப்படிக் கதிரானவன் கடைசியில் கதிர்ப் பணத்தையே திருடிக் கொண்டு ஓடினான்.

மிகச் சின்ன வயசிலிருந்தே நகரம் அவனை வசீகரித்து வந்தது. வேக வாகனங்களும், நெடும் கட்டிடங்களும் நகரத்தின் துரிதமும் அவன் மனசை மிகக் கவர்ந்திருந்தன. வெறுமே ஏங்கிய மனத்துக்கு ஒரு நாள் வயசும் தைரியமும் வந்துவிட அறுப்பு முடிந்து நெல் விற்றிருந்த பணம் அம்புட்டையும் எடுத்துக் கொண்டு மெட்ராசுக்கு வண்டி ஏறிவிட்டான். அது அவனை வரவேற்றுச் சோறு போடவில்லை. கைக்காசு கரையக் கரையத் தின்றுவிட்டுச் சுற்றி, பின் இரும்படிக்கும்பட்டறையில் போய்உட்கார்ந்தான். சென்னையை அனுபவித்த வேளையில் அத்தையின் சாபமும் எழிலின் கண்ணீரும் கூடவே அவனைச் சங்கடம் பண்ணும்.

அத்தை சபித்திருக்கவில்லை; ஆனால் எழிலு என்னிக்குத் தம்பி சாமி இவனை வீட்டில் சேர்க்கத் தடை போட்டாரோ அன்னிக்கே அவர் பொண் எழிலுக்கும் இவனுக்கும் பிடித்துப் போச்சு. சமயம் ஆக ஆக, இந்த வசீகரமும், நகர வசீகரமும் ஒன்றுக்கு ஒன்று நிற்க, பணத்தோடு எழிலைக் கரைத்து விட்டுப் புறப்பட்டு விட்டான்.

வருஷமானபின்னும் ஞாபகங்கள் ஒழியவில்லை. மாறுகத் தூண்டியது. அங்கு வந்தவுடனான ஆட்டம் பாட்டத்துக்குப் பின் கொஞ்சம் அமர்தல் ஆனதும் தன் அழுகை முழுசையும் அத்தையம்மாளுக்கு எழுதினான். மாசம் ஜீவனும்சம் கடன் தீர்க்கப் போனது. அவனுக்கு வந்த பதில்கள் சாமி மாமாவின் காட்டத்தை இன்னும் தெரிவித்தன. சமீபமாய்ப் பதில்கள் நின்று விட்டன. என்னாச்சு... அத்தை சொல்லி எழுதிவிடுவாளே — என்னாச்சு? ஊருக்குப் போகச் சமயம் பார்த்துக் கொண்டிருந்தான். அத்தையும் எழிலும்... ஆனால் சாமி மாமா? எப்படி இவர் இருக்கச்சே போவது?

அப்பத்தான் விவசாயி மறியல் என்று நகரில் கூட்டமாய்க் கூடியது. சாமி சங்கதில்லாத் தலைவர். அவர் போலீசில் அகப்பட்டுக்கிட்டார்! விவசாயி சங்கத் தலைவரோடு இணையாககோஷம் போட்டுத்தெருவில் இறங்கினதும்தான் தாமதம், கூடவே வந்த போலீஸ் கைது பண்ணியதைக் கண்ணால் பார்த்தான். ஊர் நினைவுகள் மண்டிக் கொண்டு வர உடனே கிளம்பி விட்டான். தான் அப்படி முன்பு சடுதியில் துரோகித்ததற்கு மிகுந்த வன்மம் பாராட்டும் ஒரே ஆசாமி, சாமி மாமாதான். அவர் ஜெயிலில்! அத்தையம்மாவைக் கண்டு எழிலையும் பார்த்துச் சமாதானம் பண்ண வேண்டியது.

ஊருக்கு வந்தவனுக்கு நிறைய அதிர்ச்சிகள் காத்திருந்தன. அவன் எழிலு? எழில் எவனையோ கட்டிக் கொண்டு போய் விட்டிருந்தாள்.... அத்தையம்மா சாகக் கிடந்தாள். திரும்பி வந்தவன்காலில்உட்கார்ந்துகொண்டு அழுதான். எலும்புக் கூட்டுப் பை ஒன்று

---

"குழந்தை அசல் உன் மனைவியாட்டம் இருக்கு."

"இரண்டு நாளா அதுக்கு உடம்பு சரியில்லை. இல்லாட்டா அழகா சிரிச்ச முகமா இருக்கும்!"

-அ. கிருஷ்ண சங்கர்





ஹீனமாக உயிரை விட்டுக் கொண்டிருந்தது. இவன் சொன்னதையெல்லாம் கேட்டுப் பதிலின்றிக் கேட்டுக் கொண்டிருந்தது.

படுபாவி! இதை இப்படிப் போட்டு விட்டா நீ மறியல் பண்ணிப் போராடப் போனாய்? கொதித்தான். எத்தனை பெரிசா அதை மதித்துக் கொண்டு ஏமாற்றிவிட்டுக்கிறான். அக்காள் பிணமாகக் காத்துக் கிடக்கிறாள். நெல் வேறு அறுப்புக்காக வயலில் காத்துக் கிடக்கிறது. என் எழிலையும்.... நாள் தள்ளியது. அமைதியாய் அத்தையம்மாள் செத்தாள்.

என்னவென்று சொல்வது? காத்துக் காத்துத்தான் எல்லாம் கெட்டது. அன்று நகரத்துக்காக அங்கு போனதும் அந்தக் கோபங்கள் இறங்குவதற்காக, பின் அவனுக்காக — அதுக்குள் அவள் எவனோடோ போய் விட்டாள். வளர்த்த கிழவியும் இங்கே இதுக்கு மேல் காத்திராது ஏமாம்பி விட்டாள். இனி யாருக்குகாத்திருக்க வேணும் தான்.

எல்லாவற்றுக்கும் ஒரு தீர்மானம் பண்ணிக்கொண்டுதான் சாமி மாமாவின் அறுப்புக்கு நின்ற கதிர்வயல் முன்அமர்ந்திருந்தான். சிகரெட் ஒளிர்ந்து கொண்டிருந்தது. அது உதிரக் காத்திருந்தான். தீர்ந்தது. மெள்ள எழுந்து தீப்பெட்டியின் இருப்பு சரி பார்த்துக்கொண்டான். சாய்ந்தாடிய கதிரைப் பார்த்துக் கொண்டான். பற்றவைத்தான்.

நன்றாகப் பிடித்துக் கொள்ளும் வரை காத்திருந்தான். கடைசிக்காத்திருத்தல். இனி எதுக்கும் காக்க வேண்டியதில்லை. திரும்பி ஊரை விட்டுப் பிடாரிக் கிணற்றுப் பக்கமாக நடந்தான். அந்த நிலவின் இன்ப ஒளிப் பொழிலுக்கு எதிராய்க் கதிர்கள் தழலில் தகதகத்தன.

# சென்னை-பம்பாய்-பழனியில் சிகிச்சை

பெறுங்கள். உலக புகழ்பெற்ற பழனி சித்தவைத்தியபதி



**Dr. S. காளிமுத்து,** R.M.P. (IND) V.V.C., A.M.I.H., R.A.M.P., R.H.M.P.,

அவர்களின் சுற்றுப்பயணத்தில் அல்லது பழனியில் நேரில் சந்தித்து ஆலோசனை பெற்று இதுவரை கஷ்டத்துடன் அனுபவித்த வியாதிகள் நீங்கி சுகவாழ்வு பெறலாம்! உங்கள் பிரச்சனையான-தாம்பத்திய வாழ்வில் மாறுபாடு-ஆண்மைகுறைவு சோர்வு-அணுக்கள் குறை-வீரியமின்மை-குடும்ப உறவில் முன்மாதிரி செயல்படுத்த முடியாமை நரம்பு துவளல்-தேகஉறுப்புகள் மெலிவு-கெட்டகனவுகள்-தூக்கம் இல்லாமை-குழந்தை செல்வம் இல்லாமை-வெட்கம்-நடுக்கம்-தோல்வி-ஆஸ்துமா இருமல்-வாதநோய்-சருமநோய் குடல்புண்-வயிற்றுகோளாறுகள்-நவமூல வியாதிகள் மற்றும் இதர வியாதிகளும் 85 வருட அனுபவ மருந்துகள் பெற்று சுகவாழ்வும்-மறுமலர்ச்சியும் பெறலாம்.

சென்னை விஜயம்: } தேதிகள் 10-11 & 17-18-19 } **நியூ உட்லண்ட்ஸ் ஹோட்டல்,**
எட்வோர்ட்ஸ் எலியட்ஸ் ரோடு—சென்னை—4. போன்: 83111:

பம்பாய் செம்பூர் விஜயம்: } தேதிகள் 20-21 } **பிரகாஷ் லாட்ஜ்,**
ரயில்வே சமீபம்—செம்பூர்—பம்பாய்—19. போன்: 521049.

பழனியில்:— 23-ந் தேதி முதல் 31-ந் தேதி வரை தினமும் ஆபீஸ்—

**பழனி சித்தர் வைத்தியசாலை, (Regd) பழையதாராபுரம் ரோடு, பழனி-1.**

போன்: 316—314 வீடு: 470 தந்தி: 'சித்தர்'

சென்னை—பம்பாய்—பழனி ஆலோசனை நேரம்—காலை 10 to 12 மணி மாலை 3 to 5 மணி வரை

மேலும் நேரில் ஆலோசனை பெற: 13-ந் தேதி: சேலம்-லக்ஷ்மி ராஜபவன், மாலை 2 to 4 மணி;
15-ந் தேதி: ஈரோடு-நவபவனம், காலை 10 to 12 மணி,
திருப்பூர்-ஸ்ரீகிருஷ்ணா லாட்ஜ் பகல் 2 to 3½ மணி
பொள்ளாச்சி-கோபால் பில்டிங், மாலை 5 to 6 மணி.
16-ந் தேதி: கோவை விஜயா லாட்ஜ், காலை 10 to 12 மணி;
23-ந் தேதி: மதுரை-சந்தானம் லாட்ஜ், காலை 10 to 12 மணி:

எமது மருந்துகள் கிடைக்குமிடம் } **கவிதா எண்டர்பிரைசஸ்,**
35, G. A. ரோடு, (ரெப்னி ஆஸ்பத்திரி அருகில்), சென்னை-21.

---

# ஸ்ரீ சங்கரா மெட்ரிகுலேஷன் ஸ்கூல்

(ஆங்கில மீடியம்)

**கோடைக்கானல் — மதுரை மாவட்டம்,**
**ஏற்காடு — சேலம் மாவட்டம்**

ஸ்ரீ காஞ்சி காமகோடி ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகளின் ஆசீர்வாதத்துடனும், ஆலோசனையுடனும், கோடைக்கானல், ஏற்காடு ஆகிய இடங்களில் "ஸ்ரீ சங்கரா மெட்ரிகுலேஷன் ஸ்கூல்" (ஆங்கில மீடியம்) என்ற பள்ளிக்கூடம் ஜூலை முதல் வாரத்தில் துவங்க உள்ளது. இந்த ஆண்டு 4வது மற்றும் 5வது வகுப்புகள் மட்டும் திறக்கப்படும்.

ஒவ்வொரு வருடமும் தொடர்ந்து மேல் வகுப்புகள் ஆரம்பிக்கப் படும். இந்தப் பள்ளியில் போர்டிங், லாட்ஜிங், வசதிகள் உள்ளன. மற்ற விபரங்களுக்குத் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

**கரெஸ்பாண்டன்ட்,**

**சீதாலெக்ஷ்மி ராமஸ்வாமி காலேஜ், திருச்சி-620002**

ஜூன் முதல் வாரத்துடன் அட்மிஷன்கள் முடிவடைகின்றன

திரைஞானி

# காதல் ஓவியம்

● தேனையும் தினைமாவையும் பிசைந்து தருவது போல இசையையும் காதலையும் பிணைத்துத் தந்துள்ளார் பாரதி ராஜா.

அன்று ஸ்ரீதர் 'மீண்ட சொர்க்கத்'தில் கட்டிய 'கலைக் கோவி'லில் இன்று 'விக்கிரகப் பிரதிஷ்டை' செய்துள்ளார். கோணம் புதியது.

வாய்ப்பு: அன்று ஆடத் தெரிந்த பத்மினி ஆடினார். இன்று பரதம் தெரியாத ராதாவைக் கையில் சாட்டையை வைத்துக் கொண்டு பம்பரமாக ஆட வைத்திருக்கிறார்கள். அடேயப்பா! (யார் அந்த சேஷு)!

அம்மனுக்கு முன்பு அமர்ந்து பாடி ஆத்ம திருப்தி பெறும் குருட்டுப் பாடகனை — அவனது இசை ஞானத்தை அவள் நேசிக்கிறாள். அவனது கைத்தடி எழுப்பும் ஓசைக்கு அவளது கால் கொலுசு பதில் சொல்கிறது.

தடியும் கொலுசும் பாடும் காதல் கீதம் இடைவேளை வரை திரும்பத் திரும்ப வந்து சற்றுப் பொறுமையைச் சோதித்தாலும்... அதற்குப் பிறகு கதைக்கு வலுவூட்ட அவை தேவைதான் என்பதை உணர்கிறோம்.

அம்மன் சிலை முன்பு அவன் அவளது காதலை அங்கீகரிக்கிறான். எப்படி?

அம்மன் கழுத்தில் விழ வேண்டிய பூமாலை அவன் கழுத்தில் விழ, அவள் நீட்டிய காலில் 'கொலுசுத் தாலி'யை அவன் கட்டிவிட, பின்னணியில் மங்கள வாத்தியம் முழங்க மனத்தால் மனைவியாக்கிக் கொள்கிறான். நயம்.



அவன் அங்கீகரித்த காதலை அவளது தாய் ஏற்றுக்கொள்ளவில்லை என்பதைச் சொல்ல வைத்திருக்கும் உரையாடல் அதைவிட நயம்.

எதிரிகள் அவனைப் பிரிக்கத் திட்டம் தீட்டுகிறார்கள். ஊருக்கு வெளியே அழைத்துச் சென்று தீக்கு இரையாக்கச் சதி நடக்கிறது.

சுற்றிலும் தீமூட்டப்பட்ட நிலையில் அவன் தனக்கு ஏதோ ஆபத்துச் சூழ்ந்துள்ளது என உணர்ந்து அம்மனை நினைத்துப் பாடுகிறான். வானம் பொழிந்து இயற்கை அவனைக் காப்பாற்றப் போகிறது என நினைக்கும் வேளையில், தடைகளை மீறிக்கொண்டு ஓடிவந்து' விடுகிறாள் காதலி. அவனைக் காப்

பாற்றி விடுகிறுள். காதலும் இயற்கை அம்சம்தானே?

கண்ணனைப் புருவம் வரை விழிகளை நெட்டச் சொல்லி 'டிரில்' வாங்கியிருப்பதிலும் சரி, 'இளமைக் கனியாக' இருந்த ராதாவை மூக்குப் புடைய விம்மச் சொல்லிச் சோகக் காட்சிகளில் நடிப்பைக் கக்க வைத்திருப்பதிலும் சரி தான் ஒரு ஜாலம் பிழியும் 'மிக்ஸி' என்பதை நிரூபித்துள்ளார், பாரதி ராஜா.

சிங்கப்பூர் திடீர் முறை மாப்பிள்ளை (ராதா ரவி) காதலுக்கு மட்டும் 'பிரேக்' போடுவதில்லை. கதையின் கண்ணியத்திற்கும் சேர்த்துப் போடுகிறுர்.

கவுண்டமணி ஸ்டைலே அவர் முன்னிலே யிலேயே செய்து காட்டியிருக்கிறுர் தர்மகர்த்தா கனகராஜ். பாவம் க. மணி!

உச்சக் கட்ட காட்சி தஞ்சாவூர் கோவில் கோபுர அளவு உயர்ந்து நிற்கிறது. பொல்லாத காமிரா படம் முடியும்போது கோவிலில் கூடியிருந்த அத்தனை பேரையும் வடிகட்டி விட்டு ராதாவையும் கண்ணனையும் மட்டும் தன் பக்கம் இழுத்துக் கொள்கிறது. முடிவு சோகம். ஓவியங்கள் அழிகின்றன.

மணிவண்ணன் வசனங்கள் மணி... மணி..

இளையராஜாவும் எஸ். பி. பாலசுப்பிரமணியமும் படத்தின் இணை கோடுகள்.

சங்கராபரணத்தைப் போல இதுவும் ஒரு இசையாபரணம். ▫▫

## காமராஜைச் சுற்றி →



● நாடக நடிகராக நீண்ட நாட்களாக இருந்துவிட்டு, 'லேட்'டாகத் திரை உலகப் பிரவேசம் செய்திருக்கும் எஸ். வி. சேகர் (படம்: சு. வே. ரா. மோகன்) நான்கைந்து படங்களில் நடித்த பிறகும் 'ஒரே' மாதிரி பழகுவதைச் சொல்ல வேண்டும். ஜோவியல் டைப்.

முட்டாள் தினத்தன்று பெங்களூரில் 'காதுல பூ' நாடகம் போட்டாராம். படுதா உயருவதற்கு முன்பு ஜனங்களுக்கு முட்டாள் தினத்தை ஞாபகப்படுத்த என்ன செய்யலாம் என்று யோசித்தாராம். மணி அடித்தாகி விட்டது. 'சட்'டென்று ஒரு யோசனை.

ஒலிபெருக்கியில் "இப்பொழுது நாடகப் பிரியாவின் 'மகாபாரதத்தில் மங்காத்தா' நாடகம் நடைபெறும் என அறிவித்துவிட்டாராம். ஜனங்களிடையே ஒரே சலசலப்பு. என்றாலும் அங்கு நடத்தியது 'காதில பூ' நாடகம்தானும். ஒரிரு காட்சி நடத்தி முடித்த பிறகுதான் சலசலப்பு ஓய்ந்ததாம். சொன்னார்.

இது ஒரு வகையில் 'காதில பூ'தான்.

### ராஜ பார்வை தாத்தா

● வயதானவர்கள் படிக்கும்போது கண்ணுடி அணிந்து படிப்பதைப் பார்த்திருக்கிறோம்.

எண்பது வயதான எல். வி. பிரசாத் அதற்கு நேர் விரோதம்.

"போக்கிரி ராஜா" விழாவில் எழுதிப் படிக்க மேடைக்கு வந்தவர் தாம் அணிந்திருந்த கண்ணுடியைக் கழற்றிவிட்டுத்தான் படித்தார்.

ராஜ பார்வைதான் போங்கள்!







● 'லாட்டரி டிக்கட்' படத்திற்காக ஒரு பலூன் கடையே வந்திருந்தது உள்ளே. ஒருவர் வாய் வலிக்க பலூன்களை ஊதிக் கொண்டிருக்க, இன்னொருவர் அதன் மீது 'என்னைக் காதலி' 'I LOVE YOU' என்பன போன்ற வாசகங்களை எழுதிக் கொண்டிருந்தார்.

தயாரிப்பாளர் வடிவேலிடம் "பலூன் விடு தூது காட்சியை எடுக்கிறீர்களா?" என்றேன்.

"ஆமாம் சார்! மோகன் சுகாசினிக்குப் பலூன் தூது விடுகிறார்" என்றார்.

அவருடைய தூது கோணல் மாணலாகப் பறந்தது. உரிய இடத்துக்குப்போய்ச் சேரப் படாத பாடு பட்டார்கள்.

விஜயா கார்டன்.

மரத்தடியில் அமர்ந்து கொண்டிருந்த சோபன்பாபுவிடம் பேச்சுக் கொடுத்தேன்.

'கோரிகன்ன பொருடு' என்கிற தெலுங்குப் படத்தின் படப்பிடிப்பு அது என்றும் அப்படத்தில் தனக்கு இரண்டு பெண்டாட்டிகள் என்றும் கூறினார். ஒருவர் ஜெயசுதா மற்றொருவர் லட்சுமி.

"எனக்கும் நாகேஸ்வர ராவுக்கும் எந்தப் படமாக இருந்தாலும் இரண்டு பெண்டாட்டிகள் இல்லாமல் இருக்காது" என்று சொல்லிவிட்டுத் தமக்குள் சிரித்துக்கொண்டார்.

என். டி. ராமராவ் அரசியலில் தீவிரமாக ஈடுபட்டிருப்பதைப் பற்றிப் பேச்சு எழுந்ததும் "எனக்கு பாலிடிக்ஸ் என்றாலே பயம். அது எங்கிருந்தாலும் அங்கிருந்து நழுவி விடுவேன். சமீபத்தில் ஒரு பாராட்டுவிழாவில் கலந்து கொண்டு ஆந்திர முதலமைச்சர் வெங்கட்ராமுக்கு மாலை அணிவித்தேன். அதற்குக் காரணம் அவர் முன்பு ஒரு தயாரிப்பாளர். அவர் எடுத்த 'தேசமந்தே மனுஷ்யலு' என்கிற படத்திலே நான் கதாநாயகனாக நடித்திருக்கிறேன்" என்றார்.

நாங்கள் பேசிக் கொண்டிருக்கும்பொழுது அங்கே வந்தார் சுகாசினி.

அவரை உட்காரச் சொல்லிவிட்டு "என்னுடன் நீ நடிக்க மாட்டாயா" என்று சோபன் பாபு கேட்க அவர் பதறிப்போய் முகம் சிவக்க "அப்படியெல்லாம் யார்சொன்னது? வித் ப்ளஷர்" என்றார்.

"நான் ஒரு தயாரிப்பாளரை அனுப்புகிறேன் ஒப்புக்கொள்கிறாயா?" என்றார்.

"சரி" என்றார் சுஹாசினி. ஜெயசுதாவைப் பார்த்துப்பேசப் போக வந்த சுகாசினிக்கு இப்படி ஒரு யோகம்!

● ஏ. நாகேஸ்வர ராவுக்குக் கிட்டத்தட்ட பேத்தி மாதிரி ராஜலட்சுமி. ஆனால் இருவரும் சேர்ந்த மாதிரி கட்டி அணைத்து நடனம் ஆடிக் கொண்டிருந்ததைப் பார்த்தபொழுது ஆச்சரியமாக இருந்தது.

நாகேஸ்வர ராவ் பேச்சு வாக்கில் தன்னைப் பற்றிச் சொல்லிக் கொண்டது மிக உருக்கமாக இருந்தது.

"எனக்கு மேலும் மேலும் சம்பாதிக்கும் ஆசை கிடையாது. என் உடம்பு உடைந்து போன கண்ணாடி மாதிரி. என் வீட்டு வேலைக்காரன் சாப்பிடும் சாப்பாடு கூட நான் சாப்பிடுவதில்லை." என்றார்.

அப்படிப்பட்டவரா இவ்வளவு வாகவமாக நாட்டியம் ஆடுகிறார் என்று நினைத்துக் கொண்டு அங்கிருந்து திரும்பினால் 'காதல் ஓவியம்' கண்ணனும் ராதாவும் ஓடியவாறு தேகப் பயிற்சி செய்து கொண்டிருந்தார்கள்.




ஆரோக்கியம், ஆனந்தம், ஒன்றுக்கொன்று ஆதாரம்!
Bournvita
Bournvita
போர்ன்விடா பருகுங்கள்.
உங்கள் குடும்பத்தினருக்கு இன்சுவைமிக்க போர்ன்விடா வழங்குங்கள். போர்ன்விடாவில் கோகோ, மால்ட், பால் மற்றும் சர்க்கரையின் நற்பண்புகள் நிறைந்துள்ளன. நூறு ஆண்டுகளுக்கும் மேலாக உணவுப்பான நிபுணர்கள்-காட்பரி தயாரித்து அளிப்பது.
காட்பரிஸ் போர்ன்விடா
உங்களோடு வளரும் நன்மை
Cadbury's Bournvita
OBM/7539/TM

# கொத்தமங்கலம் கிராமம்!




## இதோ ஒரு கிராமம்:

இராமநாதபுரம் மாவட்டத்தையும் புதுக்கோட்டை மாவட்டத்தையும் பிரிக்கும் எல்லைக் கோடாக அமைந்திருப்பது எங்களது கொத்தமங்கலம் கிராமம். எனது ஊர்கொத்தமங்கலம்என்று சொன்னவுடனே, ''கொத்தமங்கலம் சுப்புவின் ஊரா?'' என்று கேட்கிறார்கள். இந்த அளவுக்கு எங்கள் ஊருக்குப் பெருமை தேடித் தந்திருக்கிறார் கொத்தமங்கலம் சுப்பு.

சுமார் முந்நூறு வீடுகளைக் கொண்ட இக்கிராமம் இதைச் சுற்றியுள்ள சுமார் பதினைந்து குக்கிராமங்களுக்கு நகரமாகும். காலையிலும், மாலையிலும் காப்பி, டீ சாப்பிடுவதற்கென்றே சுமார் 3 கிலோ மீட்டர் தூரத்திலிருந்து கிராம மக்கள் வருவார்கள். இங்கு வாழும் மக்கள் செய்வது வேளாண்மைத் தொழிலே. விவசாயம் என்றதும் தஞ்சாவூர்ப் பக்கத்து விவசாயம் என்று நினைத்து விடாதீர்கள். விதையை நிலத்தில் போட்டால் அந்த விதையாவது நமக்குக் கிடைக்க வேண்டுமே என்று நினைப்பவன் தான் இந்த ஊர் விவசாயி.

குடிசைத் தொழில் அல்லது உபதொழில் என்று சொல்லும்படியாக எதுவுமே இடையாது. சுமார் 50 பேர் அருகில் உள்ள செட்டிநாடு அரசாங்க கால்நடைப் பண்ணையில் பணிபுரிகிறார்கள். ''வேலைக்கு உணவு'' திட்டத்தின் கீழ் சில சமயம் ஏரிகளை ஆழப்படுத்துதல் போன்ற வேலைகள் நடைபெறும்.

இந்த ஊரில் உள்ள வசதி வாய்ந்த நகரத்தார் பலர் தமிழ் நாட்டிலும், அண்டை மாநிலங்களிலும் தொழிற்சாலைகளை நிறுவியும், வியாபார ஸ்தலங்கள் அமைத்தும், அநேகம் பேருக்கு வேலை வாய்ப்புத் தருகின்றனர். அதை நம் ஊரிலேயே செய்யக் கூடாதா என்று கேட்டால், இந்த ஊர் தொழில் செய்யவோ தொழிற்சாலை நிறுவுவதற்கோ ஏற்றதில்லை, என்பார்கள்.

போக்கு வரத்து வசதி என்று பார்த்தால் ஊரை விட்டு நான்கு பக்கத்தில் எந்தப் பக்கம் சென்றாலும் 5 கிலோ மீட்டர் பயணம் நரக வேதனைதான். பஸ் செல்லும் சாலைகளைப் பற்றிச் சொல்லவே வேண்டாம்.

ஒரு உயர் தொடக்கப் பள்ளியை மட்டும் பெற்றிருக்கும் இந்த ஊரில் பட்டப் படிப்புப் படித்த சில இளைஞர்கள் இணைந்து ''இளைஞர் நற்பணி மன்றம்'' என்ற ஓர் அமைப்பை ஏற்படுத்தி இருக்கிறார்கள். அதன் மூலம் உயர் தொடக்கப் பள்ளியில் ஒவ்வொரு வகுப்பிலும் ஆண்டு இறுதித் தேர்வில் அதிக மதிப்பெண்கள் பெறும் முதல் மூன்று பேருக்கு அடுத்த ஆண்டு படிப்பதற்குப் புத்தகம்,நோட்டு இலவசமாக வாங்கிக் கொடுத்து ஊக்கப்படுத்துகிறார்கள்.

தமிழ்நாடு சிறுதொழில் முன்னேற்றக் கழகம் பின்தங்கிய மாவட்டமான இராமநாதபுரம் மாவட்டத்தில் அதுவும் மிகவும் பின்தங்கியுள்ள காரைக்குடி தாலுகாவில் ஒரு தொழிற் பேட்டையை நிறுவி இந்தப் பகுதி மக்களது பொருளாதார நிலையில் சற்று மாற்றம் அடையச் செய்யுமா என்று நாங்கள் ஏங்கிக்கொண்டிருக்கிறோம்.

-இராம. திருமேனி

---

**சுப்பராயர்புரம் கிராமவாசிகளுக்கு...**

11.4.82 இதழில் சுப்பராயர்புரம் பற்றி திரு எஸ். ஜெகவீர பாண்டியன் எழுதியது தொடர்பாக அவர் மீது வழக்குப் பதிவு செய்யப்பட்டுள்ளதாகத் தெரிகிறது. இது உண்மையாயின், மேற்படி கட்டுரையை ஜெகவீரபாண்டியன் எழுதி எமக்கு அனுப்பியதும், நாங்கள் பிரசுரித்ததும் எந்தவித துர்நோக்கமும் கொண்டு அல்ல என்பதை தெளிவு படுத்த விரும்புகிறோம்.

கிராமங்கள் வளம்பெற வேண்டும் என்ற நல்ல எண்ணத்தில்தான் இந்தப் பகுதியில் கிராமங்களின் அவல நிலையும் மக்களுக்கு உள்ள குறைகளும் எடுத்துக் கூறப்படுகின்றன.

இதனை உணர்ந்து திரு ஜெகவீர பாண்டியனுக்குத் துன்பம் தராதிருக்க வேண்டுகிறோம். — ஆசிரியர்

"டைம்" கேட்ட மனைவி மீனுவிடம் "5.05" என்றான் குரு.

"இன்னும் அரை மணி நேரமிருக்கு. உடம்பை அலட்டிக்காமக் கிளம்பு".

"இந்த பாட்டில்ல பருப்புப்பொடிஇருக்கு. மத்யானம் அம்மணியைச் சாதம் வடிக்கச் சொல்லித் தயிர் சாதம் சாப்பிடுங்க.வெயில்ல அலைய வேண்டாம். ரெண்டு நாளுக்கு ஒரு லெட்டர் வராட்டா நான் திரும்ப வந்துருவேன்."

"ஐயய்யோ தினம் ஒரு லெட்டர் வரும். அவசரப்படாம மெதுவா உடம்பைக் கவனிச்சிட்டு வா. நீ ஊர் போய்ச் சேர்றதுக்குள்ள ஒருலெட்டர் இதோ எழுதிட்டேன்."

குருநாதன் நெய்வேலி பெர்டிலைசர்ல ஏ.ஈ. ஒரு அன்பெமிலியர் எப். டைப் வீட்டின் மாடியில் வாசம். எட்டு மாசமானதால் மீனுவை பெங்களூர் பிறந்தகம் அழைத்தது. 5.40க்கு பெங்களூர் பாஸ்ட் பாசஞ்சர்.

சாதாரணமாகவே குண்டான மீனு நிறைய உப்பியிருந்தாள். ஆடி அசைந்து மையக் கிளம்பினாள். பிரிமியர் பத்மினி பத்து நிமிடத்தில் ஸ்டேஷனுக்குக் கொண்டு போய் விட்டுவிடும். துண்டிலிருந்து பிளாஸ்க் வரை பார்த்துப் பார்த்து எடுத்து வைத்தாள். குருவுக்கு டிரஸ்களை எடுத்து வைத்தாள். தினம் எதை அணிய வேண்டும் என்று சொன்னாள். பனியனை அம்மணியிடம் தோய்க்கத் தரச் சொன்னாள். தமிழ்நாடு பால் காலை கால் லிட்டரும் மாலை அரை லிட்டரும் வாங்கச் சொன்னாள். கொளாகா போன் பண்ணி அடுப்பு காஸ் 15ந் தேதி வாங்கணுமாம். காலை டிபனுக்கு உடுப்பியும், மதியம் அம்மிணி சமையலும் போதுமென்றாள். சினிமா கினிமா என்று தூக்கம் கெடக் கூடாதென்றாள்.

"டைம் என்னாச்சு?" என்றாள்.

"5.05" என்று பார்த்த குரு திடுக்கிட்டான். இன்னமும் அதே 5.05.ஆ. வாட்ச் சாவி கொடுக்காமல் நின்று போயிருந்தது. எப்ப நின்றிருக்கும்? அதை யோசித்து என்ன செய்ய? உடனே என்கொயரிக்கு ரிங் செய்து 'டைம்' வினவினான்.

"5.30."

கடிதில் கிளம்பி அறுபதில் அமுத்தினால் கூடப் போய்விடலாம். 27வது பிளாக்கிலிருந்து ஸ்டேஷன் பத்து நிமிடத் தொலைவு தான்.

"மீனு சீக்கிரம்." அவசரப்படுத்தினான்.

வேலைக்கார அம்மணி பெட்டியைக் கொண்டு போய்க் காரில் வைத்தாள். கடைசியாய் வீட்டு பாத் ரூமுக்குப் போய் வந்தாள். நேரம் பொன்போன்றது பெண்ணே சீக்கிரம்! மாடிப் படியில் ஸ்லோ மோஷனில் அடிஅடியாய் வைத்து மெல்ல இறங்கினாள். பிள்ளைத் தாச்சி.அவனால் அவசரப்படுத்த முடியவில்லை.

குருநாதன் வீட்டைப் பூட்டினான். சாவியை அம்மிணியிடம் தந்து "அரை மணில சேகர் வீட்ல வருவாங்க. வந்தா சாவியக் குடு" என்று சொல்லிக் கொண்டே நாலு நாலு படிகளாய்த் தாண்டி, காரில் விரைந்தேறிக் கதவைப் படாரென்று சாத்தி ஸ்டார்ட் செய்ய சாவியைத் திருப்பப் போனவன் அதிர்ந்தான். சாவி அங்கே இல்லை. எல்லாம் அவசரம். சாவி மேலேயிருந்து எடுக்காமலே வந்து விட்டான். சீக்கிரம். எட்டு நிமிஷம்தான் உள்ளது.

5.32.

திரும்பக் காரிலிருந்து இறங்கினான். நாலு நாலு படிகளாய் ஓடி அம்மிணியிடம் சாவி வாங்கி, கதவு திறந்து, டேபிள் மீதிருந்த கார் சாவி யெடுத்துத் திரும்பப் பூட்டி, அம்மிணியிடம் சாவி தந்து, திரும்ப நாலு நாலு படிகளாய்ப் பாய்ந்து இறக்கம்.

5.34.

டமார் பட். கிர்ர்ர்ர் விர்ர்ர்ர்ர்.

கார் எழுபதைத் தொட்டது. ஆறு நிமிடம்தான். டிரெயின் ஐந்து நிமிடம் நிற்கும். பிடித்து விடலாம். எல்லாம் இந்த சாவி தராத வாட்சால் வந்த வினை. கார் பி. பாய்ண்டில் திரும்ப குரு கேட்டான்.

"டிக்கட் எல்லாம் எடுத்திட்டயா? எந்த கம்பார்ட்மெண்ட்னு பார்த்து வச்சுக்கோ. உடனே ஏற சுலபமா இருக்கும். பீ கம்பார்ட்மெண்ட்தானே?"

"அய்யோ கொஞ்சம் இருப்புங்களேன். சூட்கேஸ்சாவிய அவசரத்தில கொண்டுவரல, டிக்கட் அதுலதான் இருக்கு."

குருவுக்கு எரிச்சல் எரியது. எட்டு மாசக்காரி. கத்தாதே. காம். அடக்கிக் கொண்டு காரைத் திருப்பி 70ல் விரைந்து வீட்டில் இறங்கி நாலு ஐந்தாய் படி ஏறி...

அம்மிணியைக் காணவில்லை.

எங்கே போனாள்? 'அம்மிணி' என்று அதிக டெஸிமலில் கத்தினான்.

நாலைந்து படிகளாய் இறங்கி ஹாரனில் 'அம்மிணி' என்று அடித்தான். அம்மிணி எதிர்சாரிப் பெட்டிக் கடையில் இருந்து அலறிக்கொண்டு வந்தாள்.

"அரை மணி ஆகும்னு வெத்தில போடப் போனேன். என்னம்மா திரும்பிட்டீங்க...உடம்புக்கு ஏதும்..."

"அதெல்லாம் ஒண்ணுமில்லை. வீட்டுச் சாவியைச் சீக்கிரம் கொடு."

அம்மிணி முந்தானை முடிச்சைஎடுத்து அவிழ்த்து






சாவியை எடுத்துக்
குருவிடம் தந்து
நாலு நாலு படி ஏறல்,
பூட்டுத் திறத்தல், தேடல்.

டிரஸ்ஸிங் டேபிள் முன்புறம் சாவியில்லை.

படுக்கையில்? இல்லை.

தலையணை அடியில்? ம்ஹூம்.

அவசரப்படாதே. மெதுவாகத்தேடு. அவசரத்தால்தான் எல்லா அவதியும்.

சமையலறையில் இல்லை.

5.38.

சே! இன்னும் 2 நிமிடங்கள்தான் உள்ளது.

மீனு டிரெயினை மிஸ் பண்ணக் கூடாது. இவள் இன்று போய்விடுவாள் என்று நினைத்து பவானி தெரு மச்சரை இரவு வரச்சொல்லியிருந்தான் குரு. மீனு இன்று புறப்படாட்டா எல்லாம் கெடும். சாவியை எங்கேதான் வைத்தாள்?

கடைசியாகப் பாத் ரூம் போனாளே அங்கே போய்ப் பார்.

போனான். இல்லை. படபடப்பும் டென்ஷனும் கோபமாய் உருவெடுக்கையில்

''அய்யா சாவி அம்மா கிட்ட இருக்காம்.'' அம்மணி வந்து சொன்னாள்.

அம்மிணியைக் கதவைப் பூட்டச்சொல்லிப் பாய்தல், ஐந்து, ஐந்து படி — கார் கதவு — பட் — விர்ர்ர்ர்ர்....

''மெதுவா'' என்றான் மீனு.

''சாவிய முதல்லேயே பாத்திருக்கலாம்ல. ப்ப டிரெயினை மிஸ் பண்ணப் போறோம் பார்.'' பத்மினி 70ஐத் தாண்டியது. ராத்ரி டீச்சரை வரவேண்டாம்னு சொல்லிடலாமா?

''பாத்ரும் போனதாலே சாவிய ஜாக்கெட்ல போட்டேன். அவசரத்திலே மறந்துட்டேன். டிரெயின் போனா போட்டும். பஸ்ல போறேன்.''

''இந்த உடம்புல பஸ் வேணும். குலுங்கும். டிரெயின் புறப்பட்டிருந்தாக்கூட விருத்தாசலம் போயாவது டிரெயினைப் பிடிச்சு உன்னை ஏத்திடறேன். கவலைப்படாதே.''

குரு கவலைப்பட்டான்.

இந்த ட்ரெயின் எப்படியும்கரெக்டா வந்து விடும். இன்னைக்கென்று கொஞ்சம் லேட்டா வந்தா நல்லாருக்கும். மீனு டிரெயினைப் பிடிக்க முடியாமல் போய் டிரெயின் முன்பே கிளம்பி ஒரு ஆளில்லா லெவல் கிராஸிங்கில் ஆக்ஸிடெண்டாகி சாவியினால் மீனு தப்பித்தான். அபத்தமாய் நினைக்காதே. அதெல்லாம் நடக்காது.

''வேண்டாங்க. திரும்பிறலாம். ரூபா போனாப் போட்டும். நாளைக்கு நான் போறேன்.''

''இல்லே. ஒரு ட்ரை பாத்துறலாமே.''

வேகமாக அவர்கள் ஸ்டேஷனை அடைகையில் மணி 6.00.

ஓடிப்போய் குரு எஸ். எம்மிடம் கேட்க, அவர் சொன்னார்:

''பெங்களூர் பாஸ்ட் பாசஞ்சரா? அதுக்கு குறிஞ்சிப்பாடியில சாவி கிடைக்கல. அதனாலே அரை மணி லேட். இன்னும் வரலை. சாவி கிடைச்சதும்தான் வரும்.''

குரு நிம்மதியாய்ப் பெருமூச்சு விட்டான். பவானி ரோடு நினைவில் பவனி வந்தது.

இந்திய விவசாய ஆராய்ச்சிக் கழகம், புது டெல்லியில் 6-2-82 அன்று நடைபெற்ற பட்டமளிப்பு விழாவில், உப ஜனாதிபதி எம். ஹிதயத்துல்லா உரையாற்றிய போது, விவசாயக் கல்லூரியில் பயின்ற ஒரு பட்டதாரி செய்த தவறைப் போன்று செய்யக்கூடாது என்று கூறி அந்தத் தவறு என்ன என்பதை நகைச்சுவை ததும்ப விளக்கினார்:

விவசாயக் கல்லூரியில் பட்டம் பெற்ற இளைஞன் ஒருவன் ஒரு வயதான குடியானவனிடம் ''உங்களுடைய பழைய சாகுபடி முறைகள் எல்லாம் இன்றைய நிலைக்கு சிறிதும் ஒவ்வாது...'' என்றான். ''ஏன்,...?'' என்று கேட்ட குடியானவனிடம் ''உங்களுக்கு இந்த மரத்திலிருந்து பத்து பவுண்டு ஆப்பிள் கிடைத்தால் நான் ஆச்சரியப் பட்டுப் போவேன்...'' என்றான் இளைஞன். ''நானும் அப்படித்தான் ஆச்சரியமடைவேன் மகனே... ஏனெனில் இது பீச் மரம்...!'' என்றானாம் அந்தக் குடியானவன்.

கேட்டு ரசித்தவர்: பாத்திமுத்து சித்தீக்



அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி-1982

| | |
|---|---|
| முதல் பரிசு | ரூ. 1000 |
| இரண்டாவது பரிசு | ரூ. 500 |
| மூன்றாம் பரிசு | ரூ. 500 |

(இரு கதைகளுக்குத்தலா ரூ. 250வீதம்)

ஆக மொத்தம் ரூ. 2000 பரிசுகளாக வழங்கப்பெறும்.

- தவிர பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 100 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.
- கதைகள் சொந்தக் கற்பனை என்ற உறுதிமொழி தேவை.
- அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும்வரை எழுத மாட்டேன் எனவும் உறுதிமொழி தரவேண்டும்.
- நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.
- முடிவு தேதி ஜூன் 15.
- உறையின்மேல் 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி' என்று குறிப்பிடுதல் அவசியம்.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளை திரும்பப் பெறப்போதிய அளவு தபால் தலை ஒட்டிய சுய விலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருத்தல் நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.
- சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

ஆசிரியர், கல்கி, சென்னை-600 032.




பினகா ஃப்ளோரைட் மூலம் உங்கள் பற்களின் ஆயுளை நீடியுங்கள்.

பினகா ஃப்ளோரைட், மிகவும் சக்தி வாய்ந்த ஃப்ளோரைட் கலவை கொண்டது. இது உண்மையிலேயே பல்லின் எனுமலோடு கலந்து, பற்களைப் பலப்படுத்துகிறது.

வாழ்நாள் முழுக்க, சொத்தை விழுவதைத் தடுத்துப் போரிட, இதன் பராமரிப்பு சேவை இன்றியமையாதது.

தவறாமல் பினகா ஃப்ளோரைட் கொண்டு பல் துலக்குங்கள். நீங்கள் இதனை உபயோகிப்பதைப் பொறுத்து, உங்கள் பற்களின் ஆயுள் நீடிக்கிறது.

பல்லுக்கு உறுதி

பற்சிதைவுக்கு எதிரி ...




# பினகா ஃப்ளோரைட்

**இந்தியாவின் முதன் முதல் சக்தி வாய்ந்த ஃப்ளோரைட் பற்பசை**

ULKA-BF-1-81-TAM


உங்கள் கேசம் அடர்த்தியின்றி
சக்தியின்றி இருக்கிறதா? உங்கள்
கேசத்தைப் பக்குவப்படுத்தி அழகையும்
ஆரோக்கியத்தையும் அளிக்கிறது...
செழுமையான புரதப்போஷாக்கு நிறைந்த
ஹேலோ எக் ஷாம்பூ
ஊட்டம் குறைந்த நிலையில் உங்கள் கேசம் அடர்த்தி யின்றியும், சக்தியின்றியும், ஆரோக்கியமின்றியும் காணப்படுகிறது.
பட்டுப்போன்ற, பொன் நிறமுள்ள வழவழப்பான ஹேலோ எக் ஷாம்பூ செழுமையான புரத ஊட்டம் நிறைந்த உத்தியின் மூலம் உங்கள் கேசத்தை சீராகப் படியவைத்து அதற்குத் தேவையான எல்லா ஊட்டங்களையும் அளிக்கிறது. உங்கள் கேசம் அழகாக ஆரோக்கியமாக, அடர்த்தியாகத் திகழ்கிறது.
ஹேலோ எக் ஷாம்பூவின் செழுமையான நுரைவளம் உங்கள் கேசத்தில் புகுந்து அதை பொலிவுடனும் தூய்மையான பளபளப்புடனும் திகழச் செய்கிறது.
ஹேலோ எக் ஷாம்பூ...
அழகிய அடர்த்தியான ஆரோக்கியமான கேசத்திற்கு
EGG
Halo
SHAMPOO
HES. G. 6. TM




● 2.5.82 கல்கி இதழ் படித்தேன். விவசாயிகள் போராட்டத்தைக் கிண்டல் செய்து 'கார்ட்டூன்' போட்டிருப்பது கண்டு வேதனைப் படுகிறேன். விவசாயிகளின் பிரச்னைகளைச் சரிவரப் புரிந்துகொள்ளாத உம்மைப் போன்ற ஆசிரியர்கள் இருக்கும்வரை விவசாயிகள் ஆகிய எங்களுக்கு விமோசனமே கிடையாது.

ஏத்தல் — ஆர். இளங்கோ

● தலையங்கம் படித்தேன். மொழி வெறி பிடித்தவர்கள் ஒவ்வொருவரும் படிக்கவேண்டிய தலையங்கம். முன்பு ஒரு சமயம் பம்பாய் பவன்ஸ் காலேஜில் புரொஃபசர் அல்பன்ஸோ Prof. Alfonso அவர்கள் கூறிய வாசகங்கள் நினைவுக்கு வருகின்றன.

"If English is replaced by Hindi or any other language as the medium of instruction in Universities, in a few years time there will be no University but diversity.'

ஹுப்ளி — என். மணி

● பாட மொழி தொடர்பாகத் தங்கள் தலையங்கத்தில் கூறியுள்ள யோசனைகள் அப்படியே ஏற்கப்பட வேண்டியவை. அவரவர் விருப்பத்துக்கு விட்டு விட்டால் இந்தப் பிரச்னையே எழாது.

பெங்களூரில் வாழும் தமிழர்கள் சிலர் இப்பொழுதெல்லாம் தீவிர கன்னட பக்தர்களுக்கு அஞ்சிப் பொது இடங்களில் கன்னடத்திலேயே பேசுவதாகவும் தமிழ் தெரிந்தோரிடம் கூடத்தமிழ் பேசுவதில்லை' என்றும் சமீபத்தில் பெங்களூர் சென்று வந்த ஒருவர் தெரிவித்தார். இந்த அளவுக்கு அங்கு பிரச்னை வளர்ந்துள்ளதாம்.!

திருச்சிராப்பள்ளி — அலெக்ஸ் பெலிசியா

● யாருக்கு ஓட்டுப் போட்டாலும் குழியில் விழுவது நிச்சயம் என்பதை யானைக் கார்டூன் அழுத்தமாகச் சொல்லிவிட்டது. சபாஷ்.

கோவை — எல். ஜி. சங்கர்

● பதினாறு வாரங்களாக எங்கள் உள்ளங்களைக் கொள்ளை கொண்டது 'நினைவெல்லாம் நித்யா.' சித்திரத் தொடர் கதையை இவ்வாரத்துடன் முடிப்பார் என நாங்கள் எதிர்பார்க்கவேயில்லை. அபர்ணா நாயுடுவுக்கும் அற்புதமாக ஓவியம் வரைந்த ராமுவுக்கும் எனது பாராட்டுக்கள்.

சென்னை-44 — டி. ஆர். சந்திரசேகரன்

● நினைவெல்லாம் நித்யா சித்திரத் தொடர் கதை அற்புதமாக இருந்தது. நல்ல த்ரில். சிறப்பான கதையும் அருமையான ஓவியமும் தந்த வகையில், என் நினைவெல்லாம் அபர்ணா நாயுடுவும், ஓவியர் ராமுவும் நிறைந்து விட்டார்கள்.

பரசலூர் — ஆர். நாகராஜன்

● ஹாஹ்ஹா! யார் சார் அந்த '628'? என் சார்பில் ஒரு 'ஷொட்டு' வையுங்கள். 'ஔவையே' — கேள்வியும் பதிலும் அமர்க்களம் போங்கள். 'பிரிக்க முடியாதது?' — 'கல்கியும் நகைச் சுவையும்' என்று தாராளமாகச் சொல்லிவிடலாம்!

ஸ்ரீரங்கம் — ஆர். முரளி

● 'சம்மதித்தால் தப்பா?' கதைக்கு மாருதி வரைந்துள்ள ஓவியம் என்னை வியக்க வைக்கிறது. வெறும் லைனிலேயே இவ்வளவு ஜாலமா? அந்த நிழல், நெற்கதிர்கள்... வொண்டர்ஃபுல் சார்!

திருவையாறு — கி. நரசிம்மன்

● சும்மாவா சொன்னார்கள் இறைவன் திருப்பணி செய்தால் இரட்டிப்பு நன்மை உண்டாகும் என்று? திருத்தலம் கண்டேன் கட்டுரை எழுதிய மூவருக்கு இரட்டிப்புப் பரிசு கிடைத்ததைத்தான் சொல்கிறேன்.

தக்கலை — க. நாகரத்தினம்

● என் தம்பி திரு ரவிச்சந்திரன் கூறியதாக 'வம்ச விருட்சம்' என்ற தலைப்பில் பாரதியாரின் நேர்ப் பரம்பரையைச் சரியாய்க் கட்டிக் காட்டியிருந்தீர்கள். மிக்க மகிழ்ச்சி.

என்றாலும் 2-5-82 இதழில் 'சினிமா' பகுதியில் 'முழுதாகப் பத்து ரூபாய் ஓவியர் மணி பாரதி. கவி சுப்பிரமணிய பாரதியாரின் சொந்தப்பேரன். அந்தப்படத்தில் கல்லூரிப் புரொபசராக நடிக்கிறாராம்.'' என்று வந்துள்ளது. இது தவறான செய்தி. மணி பாரதி என்பவர் கவி பாரதியாரின் சொந்தப் பேரன் அல்ல. பாரதியாரின் தாய் மாமன் திரு சாம்பசிவ அய்யரின் பெண் வயிற்றுப் பேரன்.

சென்னை-40 — வி. லலிதாபாரதி

● ஊனமுற்றோர் ஆண்டு கொண்டாடப்படும் இந்நாளில் லட்சுமி ராஜரத்தினம் எழுதிய சிறுகதை ஒரு திருஷ்டி பரிகாரம். கால் ஊனமுற்றவர்களுக்குப் பிறக்கும் குழந்தை கால் ஊனமுற்றதாக இருக்கும் என்ற கருத்தை எந்த டாக்டர் கூறினார்?

மேலப்பாலையூர் — சுமாலி

## 5

சித்ரலேகாவுக்கு எதிர்பார்த்ததை விடவும் சீக்கிரமே பதவி உயர்வு வந்துவிட்டது. இருபத்தேழு வயதுக்குள் ஒரு பெண் சூபரின்டென்டெண்டாக வருவது அந்தக் காரியாலயத்தில் இதுவே முதல் தடவை. அன்று அவளுடைய பதவி உயர்வுக்கான உத்தரவு டெல்லியிலிருந்து வந்ததும், ஆபீஸர் உள்ளே கூப்பிட்டனுப்பினர். தம்முடைய நல்வாழ்த்துக்களைத் தெரிவித்து அன்றே நாள் நன்ருக இருப்பதாகவும், அவளைப் பொறுப்பேற்றுக் கொள்ளும்படியும் சொன்ஞர். பெண் என்பதால் அவளை வெளியூருக்கு மாற்றல் செய்யவில்லை. ஏற்கனவே அவள் இருந்த பிரிவில் சூபரின்டென்டெண்டாக இருந்தவர் ரிடயராகி இரண்டு தினங்களே ஆகியிருந்தன. அங்கேயே வேலை பார்த்து வந்ததால் புதிய பொறுப்பை ஏற்றுக்கொள்வதில் அவளுக்குச் சிரமம் ஏதுமில்லாமல் இருந்தது.

'கங்கிராட்ஸ்!'

'லக்கி கேர்ள்!'

'பெஸ்ட் ஆஃப் லக்!'

'இன்னும் அஞ்சாறு வருஷத்திலேயே ஆபீஸரா ஆயிடுவீங்க!'

'எனக்கு அப்பவே தெரியும். சித்ரலேகாவோட இன்டலிஜென்ஸுக்கு அவ லைஃப்லே சீக்ரமா முன்னுக்கு வந்துடுவான்னு. ஸௌக்கியமா இருங்க!'

அவள் பலரும் சொன்ன வார்த்தைகளையும், மதிப்பீடுகளையும் மௌனமாக, ஒரு கம்பீரப் புன்னகையுடன் ஏற்றுக்கொண்டாள். வாழ்க்கையில் அவள் அதிர்ஷ்டக்காரிதான். பட்டம் பெற்ற நான்காவது மாதமே அவளுக்கு வேலை கிடைத்தது. அதுவும் பட்டதாரிகளுக்கென்றே ஒதுக்கி வைக்கப்பட்ட அப்பர் டிவிஷன் கிளார்க் வேலை. வேலையில் சேர்ந்த மூன்றாண்டுகளில் இலாக்கா பரீட்சை எழுதும் தகுதி கிடைத்தவுடன் அவள் செய்த முதல் காரியம் ஒன்றன்பின் ஒன்ருக எல்லாத் தேர்வுகளிலும் குறிப்பிட்டுச் சொல்லும்படியாக வெற்றி பெற்றது. மத்திய சர்க்காரின் நிர்வாகக் கொள்கையில் ஏற்பட்ட மாற்றத்தின் விளைவாக இப்போது அவளுக்குப் பதவி உயர்வும் கிடைத்து விட்டது. இந்த இலாகாவுக்கு அவள் வந்தபோது, அவளுக்கு இவ்வளவு சீக்கிரத்தில் பதவி உயர்வு கிடைக்கக் கூடும் என்று அவளே எதிர்பார்க்கவில்லை. நல்ல நேரத்தில் சித்ரலேகா சூபரின்டென்டெண்ட் பதவியை ஒப்புக்கொண்டு, அந்த ஆசனத்தில் சென்றமர்ந்தாள்.

ராஜாமணி அன்று மதியம்தான் காரியாலயத்திற்கு வந்தான். அரை நாள் லீவு எழுதிக் கொடுக்க வேண்டும். இடை வேளையாயிருந்ததால் யாரும் தம் ஆசனங்களில் இல்லை. நாளேட்டில் கையெழுத்திட்டு அரை நாள் லீவுக்கென அப்ளிகேஷன் எழுதி வைத்தான்.

வெளியே சென்று சிகரெட் பிடித்து வரலாம் என்று நாயர் கடைப் பக்கம் சென்ருன். அங்கே ராவ் நின்று கொண்டிருந்தான்.

''ஹலோ! ராஜாமணி! சித்ரா சூபரின்டென்டெண்ட் ஆயிட்டா!'' என்ருன்.

ராஜாமணிக்கு என்ன சொல்வதென்றே தெரியவில்லை. 'ஐ ஸீ!' என்ருன்.

''உன் பாடு யோகம்தான்!''

''ஏன்?''

''அவளை உன் செக்ஷனுக்குத்தான் போட்டிருக்காங்க.''

''அதனுல் என்ன?''

''இந்தப் பால்வாதானே வேண்டாம் கிறேன். ஷி லைக்ஸ் யூ வெரி மச்! உனக்கு இனிமே சலுகை நிறையக் கிடைக்கும்!''

''நான்சென்ஸ்! சர்க்கார் அலுவலகத்தில் எவனுக்குத்தான் சலுகை இல்லே. இல்லே நான் மட்டும் என் பங்கு வேலையைச் செய்யாம சம்பளம் வாங்க முடியுமா? யூ நோ ஐ ஆம் ட்யூட்டி மைன்டட்! யார் வந்தால் எனக்கென்ன? எனக்குன்னு அலாட் பண்ற வேலையைச்செய்வேன். அதுக்கு மேலே எனக்கு எந்த ஒட்டுதலும் கிடையாது. சித்ரலேகா சூபரின்டென்டெண்டாகிறதினலே நான் என் இயல்பை மாத்திக்க முடியுமா? தவிர அவ என்கிட்ட தாராளமா, ஒரு சகஜ பாவத்தோட பழகுறாங்கற ஒரு காரணத்துக்காகவே நான் அதிகமான சலுகைகளை எதிர்பார்க்கலாமா? ஏண்டா ராவ்! என்னைப் பத்தி ஓரளவுக்குப் புரிஞ்சிண்டிருக்கிற நீயே இப்படிப் பேசலாமா? நோ! இனிமேதான் எனக்கு ப்ராப்ளம்ஸ் ஆரம்பிக்கப் போகிறது. நான் முன்னை விட இனிமே பேச்சைக் குறைக்கணும். அவளும் என்கிட்டே சகஜமா இருக்கிறதுங்கறது சந்தேகம்தான்!'' என்ருன்.

''உனக்குச் சரியாத்தான் பேர் வச்சிருக்கு. 'சாமியார்'. சரியான இதுடா நீ!... ஏண்டா ராஜாமணி நான் ஒண்ணு கேட்டால் கோவிச்சுக்க மாட்டியே!''

''நோ!''

''இப்ப நீ இன்ஃபீரியரா ஃபீல் பண்றியா?''

ராஜாமணி சிரித்தான். ''ஏண்டா! எதுக்காக நான் அப்படி நினைக்கணும்? அஞ்சாங் க்ளாஸ்லே மில்லர் ஆஃப் தி டீன்னு ஒரு பொயட்ரி படிச்சேன். அது நினைவுக்கு வர்றது. ''ஐ என்வி நோபடி.... நோபடி என்வீஸ் மீ...'' ன்னு அந்த மில்லர் தன் சந்தோஷத்துக்குக் காரணத்தை, ராஜாகிட்ட சொல்ருன். அதனேட தாத்பரியம் இப்போ புரியறது. நாம ஒருத்தரை வெறுக்கறதுக்கு அடிப்படைக் காரணம் பயம்தான். பயத்துக்குக் காரணம் தாழ்மை உணர்ச்சி. எனக்கு ரெண்டுமே இல்லே. என் வாழ்க்கை இப்படித்தான் இருக்கணும்னு நான் தீர்மானம் பண்ணிட்டேன். அதுக்கு மத்தவங்களைப் பொறுப்பாக்கிறது எப்படிச் சரியாகும்? நான் பரீட்சை பாஸ் பண்றதை சித்ரலேகா தடுத்

தானா? இல்லையே. அவளுக்குக் கேரியர் மைண்ட். பாஸ் பண்ணிரு. பிரமோஷன் வந்திருக்கு. இதிலே நாம அசூயைப்பட என்ன இருக்கு? தவிர ஷி இஸ் எ குட் கேர்ள். கொஞ்சம் முன்கோபமிருக்கு. மனசில தங்க மானவ. மத்தவங்களுக்கு உதவி செய்யற தைத் தன்னுடைய வாழ்க்கை லட்சியமா நினைக்கிரு. நல்ல ஃபேமிலி பேக்ரவுண்ட். கெட்டிக்காரி. வெரி ஸ்ட்ரெயிட் ஃபார் வோர்ட். மனசிலே எதையுமே வெச்சிக்கத் தெரியாது. என்னுடைய அபிப்பிராயத் திலே ஷி ஈஸ் எ ஃபர்பெக்ட் லேடி. அவ மனசு நோகும்படியா நான் எப்பவும் நடந் துடக் கூடாதேன்னுதான் கவலைப்படறேன். நல்லவங்க மனசை நோக வைக்கக் கூடாது. அது நல்லதில்லே!'' என்ருன்.

''மை குட்னெஸ்! டேய் ராஜாமணி! நான் என்னென்னவோ நெனைச்சேன்! நீ சித்ரலேகா மேலே வெச்சிருக்கிற மதிப்பும் மரியாதையும் இப்பத்தான் எனக்குப் புரி யறது. மத்தவங்களை மாதிரி ஒரு பெண் சூபரின்டென்டெண்ட் கீழே வேலை பார்க் கிறதை ஒரு மதிப்புக் குறைவான விஷயமா நினைக்காம, நீ பெருமையா நினைக்கிறப்லே இருக்குதே!'' என்ருன் ராவ்.

''நமக்கு மேலதிகாரியா இருக்கிறவங்க ஆணுயிருந்தாலென்ன, பெண்ணு யிருந்தா லென்ன? அவங்க பதவிக்குத் தரவேண்டிய மரியாதையைக் கொடுத்துத்தான் ஆகணும். அவங்க நமக்கு ஒதுக்கற வேலையை ஒழுங்



காச் செய்யணும். அதிகாரியா இருக்கிறது ஒரு பெண்தானேன்னு அசட்டை செய்ய முடியுமா? இல்லே அந்த மாதிரி ஒரு மனோ பாவத்தைவளர்த்துக்கிறதுதான் சரியாகுமா? பொருளாதாரத்தினோட அடிப்படையிலே சமுதாயம் இயங்கிக்கிட்டு வருது. நாம பொருள் சம்பாதிக்க வேண்டிய நிர்ப்பந்தம் இருக்கு. இதிலே நம்ம வாழ்க்கை ஓடறது. இந்த ஓட்டத்திலே நாம பலவிதமான பேர் களைச் சந்திக்கிறோம். எல்லாத்தையும் அநு சரிச்சுத்தான் போகணும். இல்லேன்னா இந்த வேலை வேண்டாம்னு உதறிட்டுப் போயிட ணும்.''

''மை குட்னஸ்! எதுக்கும் தயாரா ஒரு தத்துவம் பேசிடறே. உன்னால எப்படி எதுக்கும் ஒத்துப் போக முடியறது?''

'' 'ரிகன்ஸிலியேஷன் டு தி சிச்சுவேஷனல் டிமாண்ட்' இன்றைய காலக் கட்டத்திலே அத்தியாவசியமாயிடறது. இல்லேன்னா தேவையில்லாத பல அபிப்பிராயங்களை மன திலேஉருவாக்கிட்டு, மண்டையைப் போட் டுக் குழப்பிக்கிறதினாலே என்ன லாபம்?''

இடைவேளை முடிந்ததும் அவர்கள் திரும்ப வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது.

ஹாலினுள் பிரவேசித்தவுடன் ராஜா மணியின் கண்கள் சித்ரலேகாவின் கண்களைச் சந்தித்தன. அதுகாறும் அவனை எதிர்பார்த் துக் காத்திருந்தவள் போல் அவளுடைய பார்வை பளிச்சிட்டது. அந்தப் பார்வையின் பொருளில் அவன் அவளைப் புரிந்துகொண் டான்.

''கன்கிராஜுலேஷன்ஸ்!''

''தாங்க்யூ ஸார்!'' சொல்லிவிட்டு அவள் புன்னகைத்தாள். அவள் கன்னங்களில் விழுந்த குழிகளைக் கண்டு அவன் ரசித்தான். சிறிது நேரம் இருவருமே பேசவில்லை.

''ஸோ! உங்க கற்பனை நிஜமாயிட்டது.''

''உம்!''

''டிரீட் ஏதானும் உண்டா?''

''உங்களுக்கு நான் தரணுமா?''

''பின்னே! பிரமோஷன் கிடைச்சிருக்கே!''

''இல்லே! நான் தந்துதான்....''

இருவரும் லேசாகச் சிரித்தனர்.

''எனக்கு ரொம்ப மகிழ்ச்சியா இருக்கு சித்ரா! ஸாரி! இனிமே நான் பெயர் சொல் லிக் கூப்பிடலாமா? எல்லாரையும் போல 'மேடம்'னுதான் கூப்பிடணும்.''

''எப்படியோ கூப்பிட்டாச் சரி!''

''ஏன்?''

''நீங்க எங்கே பேசாமலேயே இருந்திடு வீங்களோன்னு நினைச்சேன்!''

''அது எப்படி முடியும்? ஆபீஸ்னு இருந் தாப் பேசாமல் இருக்க முடியுமா?''

''அப்போ ஆபீஸ் சம்பந்தமான விஷயங் களைத்தான் பேசுவீங்க இல்லையா?''

''வேற என்ன பேசணும்?''

''எனக்குத் தெரியாது!''

''நீ என்ன சொல்றே?'' அவன் உதட் டைக் கடித்துக் கொண்டான். ''ஸாரி! நீங்க என்ன சொல்றீங்க?''

அவள் சிரித்தாள். ''நல்ல வேடிக்கை!''

''இல்லே மேடம்! நீங்க எனக்கு இம் மீடியட் சுபீரியர். நான் மரியாதை தவறிப் பேசறது தப்பில்லையா? இனிமே நான் பழைய ராஜாமணியா இருக்கலாம்னு நினைக் கிறது தப்பில்லையா? தர்ம சங்கடம்தான்!''

''எல்லாம் நம்ம மனசோட கற்பனை தான்.''

''ரியலி?''

''யெஸ்!''

''நீங்க நீங்களாகவே இருக்கிறதுதான் நல் லது. திடீர்னு எப்படி மாறிவிட முடியும்? உங்களைப் பொறுத்தவரைக்கும் நான் சித்ரா தான். தாராளமா ஒருமையிலேயே அழைக் கலாம்.''

''தாங்க்ஸ்! ஆனால் அது சரியில்லேன்னு படறது. நான் அப்படிக் கூப்பிட்டா அது உங்களுக்கு வித்தியாசமாப் படாது. மத்த வங்களுக்கும் இடம் தர்றாப்லே ஆயிடும். ஸோ! இப்பத்திலேருந்து நீங்க மேடம்தான்!''

அவள் சிரித்தாள்.

''இன்னிக்குச் சாயந்திரமா உங்களோட வெளியிலே போகலாம்னு இருந்தேன்.''

''எங்கே?''

''பீச்சுக்கு. மனம் விட்டுப் பேசலாம்னு நெனைச்சேன். ஆனா இன்னிக்கு முடியாது.''

''ஏன்?''

''நீங்க வீட்டுக்குப் போகணும். உங்க பிரமோஷனைப் பத்தி உங்க அம்மா கிட்டே சொல்லணும். அவங்களை நமஸ்காரம் செஞ்சி ஆசீர்வாதம்வாங்கிக்கணும். அதான் முறை.''

''பரவாயில்லை!''

''நோ! யூ ஆர் டேகிங் இட் லைட்லி!''

''சரி!''

''நாளைக்குப் போகலாம்!''

''ரைட்டோ!''

''நான் என் சீட்டுக்குப் போறேன். ஐ விஷ் யூ ஆல் தி பெஸ்ட்! அரை நாள் கேஷுவல் லீவ். லெட்டர் வச்சிருக்கேன்.''

''சரி! பார்க்கிறேன்!''

அவள் அவனைப் பார்த்தவாறே நகர்ந் தாள். திடீரென்று அவள் அவனுக்கு மிக அருகாமையிலிருந்தும், அந்நியப்பட்டு நிற்பதாகத் தோன்றியது. இனிமேல் ஆபீ ஸில் தான் இருக்கும்போது சர்வ ஜாக்கிரதை யாக இருக்க வேண்டும் போலத் தோன்றியது. பழைய சகஜ பாவம் இனி இந்த இடத்தில் தலைகாட்டக் கூடாது என்று எண்ணிக்கொண் டான். மௌனமாகத் தன் இருக்கைக்குச் சென்று அமர்ந்து வேலையைத் துவங்கினான்.

(தொடரும்)

**ஆசிரியர்: வீடு கட்ட முக்கிய மாகத் தேவைப்படுவது எது?**
**மாணவன்: ஆபீஸ் லோன் சார்.**

**அ. கிருஷ்ண சங்கர்**





○ நௌஷத்



○ புத்தனேரி

# நீங்கள் கேட்டவை

## தராசு

✖ டி. செல்வராஜன், அதிராமபட்டினம்.

? காதல் ஓவியத்தில் பழைய படங்களில் உள்ளது போல் அதிகப்பாடல்கள் உள்ளதே...

! அதிகப் பாடல்கள் என்பது மட்டுமல்ல அவை நல்ல கர்நாடக இசையில் அமைந்தவை என்பதும் கவனத்துக்குரியது. 'புதியன கழிதலும் பழையன புகுதலும்' என்று புரட்டிப் போட்டுச் சொல்லலாம். அல்லது 'ஓல்ட் இஸ் கோல்ட்' எனலாம். இவ்வாண்டு பால்கே அவார்டு பெற்ற நௌஷத் கேட்கிறார்: ''நமது சாஸ்திரிய மரபில் அமைந்த சினிமா சங்கீதத்துக்கு இன்று மதிப்பில்லை என்று கூறி மேல் நாட்டு டியூன்களைக் காப்பி அடிக்கிறீர்களே, அப்படியானால் எனது பழைய ரிக்கார்டுகள் இன்றும் ஓராண்டுக்கு ஒரு கோடி ரூபாய்க்கு விற்பனையாவது ஏன்?''

கொசுறு: நௌஷத்தின் இசை அமைப்பில் ஒரு பாடலை சைகால் மது அருந்து முன் பாடினார்; மது அருந்திய பின்னும் பாடினார். இரண்டையும் பதிவு செய்த பிறகு போட்டுக் கேட்டார். மது அருந்தாமல் பாடியதுதான் மனத்தை உருக்குவதாக சைகாலே ஒப்புக் கொண்டார். திரை உலகு கவனிக்க.

✖ வாசு, திருக்குறுங்குடி

? தற்பொழுது நாணயத்துக்கு இருக்கும் மதிப்பு நாநயத்துக்கு இல்லையே! ஏன்?

! யார் சொன்னது? கவிஞர் புத்தனேரி சுப்பிரமணியத்தின் நா நயம் அவருக்கு ஏராளமாய் நாணயத்தைப் பெற்றுத் தந்துள்ளதே! ''சிவகாமியின் சபதம்'', ''காவிரி தந்த கலைச் செல்வி'' போன்ற நாட்டிய காவியங்களையும் ஏராளமான கவிதைகளையும் எழுதிய இவருக்கு பாரதிதாசன் பரிசு ரூ. 10,000 கிடைத்திருக்கிறது! தமிழக அரசு உபயம்.

✖ இரா. புதுவைவேந்து, புதுச்சேரி-1

? இல்லை என்ற பதிலைக் கேட்டும் மகிழ்ச்சி கொள்வது எப்போது?

! கோவையில் டி. பி. ஒழிப்புக் கூட்டம் ஒன்றுக்குக் குறித்த நேரத்தில்வந்துசேர்ந்த ஹாண்டேயின் சொற்பொழிவைக் கேட்க ஆள் இல்லை என்று கூறக் கேட்டபோது மகிழ்ச்சியாகத்தான் இருந்தது! அமைச்சர்கள் எத்தனை மக்களை எத்தனை சந்தர்ப்பங்களில் காக்க வைக்கிறார்கள்! இதோ பழிவாங்கியாகி விட்டது என்று ஓர் அல்ப திருப்தி! கூட்ட நிர்வாகிகள் எதிர்பார்த்த பொறி இயல் நிறுவன ஊழியர்கள் 2000 பேர் மே தினத்தைக் கொண்டாடப் போய் விடவே அகப்பட்ட ஆசாமிகளை வருந்தி அழைத்துவந்து அமர்த்தினார்கள். ஒன்றரை மணி நேரம் தாமதமாகக் கூட்டம் ஆரம்பித்தது!

✖ மு. பாஸ்கரன், புதுவை-5

? பொது நலம், சுயநலம் இவற்றில் உயர்ந்தது எது?

! சுயநலமே பொதுநலமாவதுண்டு. ஜப்பான், மேற்கு ஜெர்மனி, அமெரிக்கா போன்ற நாடுகளின் வேகமான வளர்ச்சி தனி மனிதர்களின் லாப நோக்கை அடிப்படையாகக் கொண்டதே. அது நாட்டு நலனாகவே முடிந்தது. இந்தியாவிலோ பல சந்தர்ப்பங்களில் பொது நலன் எனப்படுவது அரசாங்கத்தின் வடிகட்டின சுயநலனாகிறது. உதாரணம்: அரசு வர்த்தக



ராதா




கார்ப்பரேஷனின் நோக்கம் இங்கு பற்றுக்குறை நீங்கவும் விலைவாசிகள் குறையவும் அயல் நாடுகளிலிருந்து அத்தியாவசியப் பொருள்களை இறக்குமதி செய்து விநியோகிக்கவேண்டும். ஆனால் 80—81ல் மக்கள் உணவுக்குப் பயன்படுத்தும் எண்ணெய் இறக்குமதி செய்து ''நியாய விலைக் கடைகள்'' மூலம் விநியோகித்ததில் இந்த நிறுவனம் 90 கோடி ரூபாய் லாபம் சம்பாதித்திருக்கிறது. இங்கு பொதுச் சந்தையில் விலை உயர்வாக இருந்ததால் நாங்களும் விலையை உயர்த்தினோம்'' என்று சமாதானம் கூறும்போது ''இந்த அரசு நிறுவனம், (1) கொள்ளை லாப, பதுக்கல் வியாபாரிகளுக்குத் துணை போகிறது. (2) தானும் அரசு சார்பில் கொள்ளை லாபம் அடிக்கிறது. (3) விலைவாசிகள் குறையாமல் காக்கிறது.

STC: Socialistic Tyranny Corporation.

✖ எல். ரவிசங்கர், சென்னை-63.

? ஒரு ஜனநாயக நாட்டில் சர்வாதிகாரம் வேரூன்றும் தருணம் எது?

! இந்திராகாந்தி மேனகாவைத் தம் வீட்டிலிருந்து அனுப்பிவிட்டதை அவரது சொந்தக் குடும்ப விவகாரமாகவோ அல்லது ஒரு கட்சியின் உட் பூசலாகவோ கருதுவது ஜனநாயக வாதிகளுக்குச் சாத்தியமே. ஆனால் வெளியேற்றப்பட்ட மேனகா தனக்கு ஒரு வீடு வாடகைக்குக் கிடைக்காமல் தவிக்கும்போது சர்வாதிகாரம் வேரூன்றி விட்டது என்றும் அதற்கு மக்கள் பயந்து நடுங்குகிறார்கள் என்றும் தான் அர்த்தம். தில்லி கோல்ஃப் லிங்க் பகுதியில் 22 காலி வீடுகளைப் பார்த்தும் எதுவும் வாடகைக்குக் கிடைக்கவில்லை. கடைசியில் 3000 ரூபாய் மாத வாடகைக்கு ஒரு வீட்டை விட ஒப்புக்கொண்டார் ஸ்ரீமதி சுவரன் கௌர் பேதி. தேதி நிர்ணயித்து மனை புக எண்ணிய போது, அன்று காலை ஓடிவந்த ஒருவர், ''ஸாரி, மேலிட உத்தரவு. உங்களுக்கு வீடு வாடகைக்குத் தருவதற்கில்லை'' என்றார்!



மேனகா

✖ ஸ்ரீ மதி வசந்தா கோவிந்தன் பங்களூர்-38

? லேட்டஸ்ட் போரிங் சமாச்சாரம் என்ன ஸார்?

! 1980-81ல் 168 அரசுத் துறை நிறுவனங்களின் (மத்திய அரசு) மொத்த லாபம் 40 கோடி. அதாவது முதலீடான 20,000 கோடியில் இது 0.2 சதவீதம்! வரிகளைச் செலுத்திய பிறகோ மொத்த நஷ்டம் 182 கோடி! இது சென்ற ஆண்டைப் போல் இரு மடங்கு நஷ்டம்! லாபம் சம்பாதிக்கும் அரசுத் தொழிலகங்களின் எண்ணிக்கை 103லிருந்து 94 ஆகக் குறைந்தது!

. இதைவிட போரிங் சமாசாரம்: உள்நாட்டில் நஷ்டமடைவது போதாதென்று நமது அரசுத் துறை நிறுவனங்களில் பல அயல் நாடுகளிலும் கட்டுமானப் பணி ஏற்றுக்கொண்டு அங்கே யெல்லாம் ஜாம் ஜாம் என்று நஷ்டப்பட்டுக் கொண்டிருக்கின்றன. எப்படியோ எடுத்த பணியை முடிக்க வேண்டுமே என்பதால் அயல் நாடுகளில் ஏராளமாகக் கடன் வாங்குகின்றன. நமது ரிசர்வ் வங்கி கையைப் பிசைந்து கொண்டு நிற்கிறது!

பரிசு ரூ. 10 பெறுபவர்:
மு. பாஸ்கரன்,
18, விவேகானந்தா நகர்
புதுவை-5






# பாக்லாந்து: ஆடும் ஓநாய்களும்!

பி.எஸ்.ராமமூர்த்தி

ஆடு நனைகிறதே என்று ஓநாய் அழுத தாம். இது கதை. இன்று அட்லாண்டிக் மகா சமுத்திரத்தில் துயில் கொண்டிருக்கும் பாக்லாந்து தீவுகளிடம் பிரிட்டனும், அர்ஜென்டினாவும் காட்டும் பரிவு ஆடு-ஓநாயின் கதையைத்தான் ஞாபகப்படுத்துகிறது. அர்ஜன்டினாவுக்கு உள்நாட்டுப் பிரச்னைகள் ஏராளம். ராணுவ ஆட்சி நடைபெறும் இந்நாட்டில் பணவீக்கம் தலைவிரித்து ஆடுகிறது. இந்நிலையில் உள்நாட்டுப் பிரச்னைகளிலிருந்து கவனத்தைத் திசை திருப்ப அதன் அதிபர் லியோபால்டோ கால்டியரி பாக்லாந்து விவகாரத்தை நன்கு பயன்படுத்தியிருக்கிறார். "பாக்லாந்து நமது பிதுரார்ஜித சொத்து" என்ற முழக்கத்தால் மக்களின் உணர்ச்சிகளைத் தூண்டி விட்டிருக்கிறார். பிரிட்டிஷ் பிரதமர் மார்க்கரெட் தாட்சருக்கும் இப்பொழுது தசை சரியாக இல்லை. பாக்லாந்து விவகாரத்தில் கோட்டை விட்டு விட்டால், அவரதுபதவி பறிபோய், அரசியல் வாழ்வே அஸ்தமித்து விடும். எனவே அவரும் கால்டியரியும் பாக்லாந்தைத் தங்களது எதிர்காலத்தை நிர்ணயிக்கும் மானப் பிரச்னையாகக் கருதுகின்றனர்.

தெற்கு அட்லாண்டிக் சமுத்திரத்தில் அமைந்துள்ள பாக்லாந்து தீவுகளின் எண்ணிக்கை சுமார் 200. இவற்றுள் முக்கியமான தீவுகள் கிழக்கு பாக்லாந்தும், மேற்கு பாக்லாந்தும். 1980ம் ஆண்டு கணக்குப்படி இத்தீவுகளின் ஜனத்தொகை 1813. ஆனால் இவர்கள் பராமரித்து வளர்க்கும் ஆடுகளின் எண்ணிக்கை 650000! இத் தீவுகளின் தலைநகரான ஸ்டான்லியின் ஜனத்தொகை 1050. இவர்கள் பேசும் மொழி ஆங்கிலம்.

1690ம் ஆண்டு காப்டன் ஜான் ஸ்ட்ராங் என்கிற மாலுமி முதன் முதலில் பாக்லாந்தில் காலடி வைத்தார். அப்பொழுது பிரிட்டிஷ் கப்பல் படையின் பொருளாளர், வைகவுண்ட் பாக்லாந்து. அவரது பெயரைத் தான்இறங்கிய தீவுக்குச் சூட்டினார் ஸ்ட்ராங். ஆனால் பின்னால் வந்த பிரெஞ்சுக்காரர்களும், ஸ்பெயின் தேசத்தவர்களும் இதை மால்வினாஸ் தீவு என்றே அழைத்தனர்.

தெற்கு ஜார்ஜியா: தெற்கு ஸாண்ட்விச் தீவுகள், ஷாக்ராக்ஸ், கிளார்க் ராக்ஸ் என்ற தீவுகள் பாக்லாந்தின் அதிகாரத்துக்கு உட்பட்டவை. இவற்றுக்குள் தெற்கு ஜார்ஜியாதான் பாக்லாந்துக்கு அருகில் — அதாவது 1290 கி. மீ. தொலைவில் — அமைந்துள்ளது. இங்கு சுமார் 20 பேர் வசிக்கின்றனர். மற்றத் தீவுகளில் ஜனங்கள் இல்லை.

1764ல் கிழக்கு பாக்லாந்தில் ஒரு சிறிய பிரெஞ்சுக் காலனி அமைக்கப்பட்டது. மூன்றாண்டுகளுக்குப் பிறகு இது ஸ்பெயினுக்கு விற்கப்பட்டது. இதற்கிடையில் 1766ம் ஆண்டு சுமார் நூறு பிரிட்டிஷ்காரர்கள் எக்மண்ட் என்கிற துறைமுகத்தில் இறங்கி, அங்கு வசிக்கத் தொடங்கினர். பொருளாதார நெருக்கடி காரணமாக 1774ல் அவர்கள் அந்த இடத்தைக் காலி செய்தனர். அப்பொழுது அவர்கள் 'பாக்லாந்து தீவுகள் மூன்றும் ஜார்ஜ்மன்னரின் ஏகபோக சொத்து' என்று ஒரு கல்லில் பொறித்துவிட்டுச் சென்றனர். ஸ்பெயினும் 1811ம் ஆண்டு கிழக்கு பாக்லாந்திலிருந்து விலகிக்கொண்டது.

1816ல் அர்ஜெண்டினா, ஸ்பெயின் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற்றது. நான்கு ஆண்டுகளுக்குப் பிறகு பாக்லாந்தின் மீது தனது உரிமையை நிலைநாட்ட அர்ஜெண்டினா அங்கு ஒரு கப்பலை அனுப்பியது. 1831ல் அமெரிக்கா பாக்லாந்தில் அர்ஜெண்டினா அமைத்த கோட்டையைத் தகர்த்தது. சில ஆண்டுகள் பாக்லாந்து ஒருவரது ஆதிக்கத்திலும் இல்லை. ஆனால் 1833ம் ஆண்டு அது பிரிட்டனின் ஆளுகைக்குள் வந்தது.

நெடு நாட்களாக அர்ஜெண்டினா பாக்லாந்தின்மீது பாத்தியதை கொண்டாடுகிறது. இதற்கு இரண்டு காரணங்கள். 1816ம் ஆண்டு அர்ஜெண்டினா சுதந்திரம் அடைந்தபோது ஸ்பெயினின் ஆட்சியில் இருந்த பகுதிகள் எல்லாம் அர்ஜெண்டினாவுக்குச் சொந்தமாகவேண்டும் என்ற ஒப்பந்தம் இருந்தது. 1811ம் ஆண்டு வரை ஸ்பெயின் கிழக்கு பாக்லாந்தை ஆண்டு வந்தது. 1833ல்தான் பிரிட்டன் பாக்லாந்துக்கு வந்தது. 1816ல் பாக்லாந்து தீவுகளில் மக்களே கிடையாது. ஆகையால் இத் தீவுகள் தனது தேசிய பிதுரார்ஜித உடைமை என அர்ஜெண்டினா கருதுகிறது. இரண்டாவதாக பிரிட்டனை விட அர்ஜெண்டினாதான் பாக்லாந்துக்கு அருகில் இருக்கிறது. 150 ஆண்டுகளாகத் தான் ஆண்டு வருவதால் பாக்லாந்து தனக்குத்தான் சொந்தம் என்கிறது பிரிட்டன். மேலும், பிரிட்டிஷ் ஆட்சி நீடிப்பதையே பாக்லாந்து மக்கள் விரும்புகிறார்கள்.

பாக்லாந்து மக்களின் முக்கிய தொழில் கம்பளி உற்பத்தி, ஆட்டுப் பண்ணை நடத்துதல், மற்றும் மீன் பிடித்தல். ஆனால் 13,000 கிலோ மீட்டர் அப்பாலுள்ள பிரிட்டனுக்கோ 800 கிலோ மீட்டர் தள்ளி அமைந்துள்ள அர்ஜெண்டினாவுக்கோ இத் தொழில்களால் அதிகப் பயன் கிடையாது. தற்போது இத்தீவுகளில் எண்ணெய், மற்றும் எரிவாயு வளங்கள் இருப்பதாகக் கூறப்படுகின்றன. இன்றையப் பொருளாதார வளர்ச்சிக்கு இந்தவளங்கள் முக்கியமானவை. இவற்றை விட்டுக் கொடுக்க பிரிட்டனும் அர்ஜெண்டினாவும் தயாராக இல்லை.

நனைகின்ற ஆடு யாருக்குச் சொந்தம் என்று பொறுத்துப் பார்க்க வேண்டும்.

கார்டூன்கள் நன்றி:

**வாஷிங்டன் போஸ்ட்**

---

# ஆன்றோர் வாக்கு...



'அவதரணம்' என்றால் இறங்கி வருவது' என்றே அர்த்தம். பரத்துக்குப் பரமாக, பராத்பரமாக — 'அப்பாலுக்கு அப்பால்' என்பார்கள். அப்படி யிருக்கப்பட்ட — ஈசுவரன் இறங்கி வந்து நமக்கு நடுவில் பிறந்து தர்ம ஸம்ஸ்தாபனம் பண்ணுவது அவதாரம் எனப்படுகிறது.

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர
ஸரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்

எந்தெந்த இடத்தில் என்னுடைய மனம் உள்ளதோ அங்கெல்லாம் உன்னுடைய ஸ்வரூபம்; எந்தெந்த இடத்தில் என்னுடைய தலை உள்ளதோ அங்கெல்லாம் உன்னுடைய இணையடிகள்.

—ஆதி சங்கரர்

நான் வம்பளக்க விரும்பவில்லை. வேலை செய்ய நினைக்கிறேன். நான் அன்பைப் பற்றி உரையாட நினைக்கவில்லை! அன்புளப்படி இருக்கும் என்பதைச் செயலில் நிரூபிக்க நினைக்கிறேன்! — டாக்டர் ஷ்வைட்ஸர்

தேனீ எந்தப் பூவிலிருந்தேனும் தேனை நுகர்ந்து எங்கேனும் வாழலாம். ஆனால் பூக்கள் மலராத காலத்தில் என்ன செய்வது? தேன் இல்லாத காலத்தில் எதை உண்டு வாழ்வது? மழைக் காலத்தில் எங்கே ஒதுங்குவது? இப்படிப்பட்ட இடர்ப்பாடுகள் இருப்பதால் தேனீக்களும் சமுதாயமாய்க் கூடி வாழ வேண்டியுள்ளது. அவற்றைப் படைத்த கடவுள் அவ்வாறு கூடி வாழும் இறனையும் அவற்றுக்கு அளித்துள்ளான்.

—மு. வரதராசனார்

உயர்ந்த பரம்பரையில் பிறந்தவர்களுடைய கம்பீரமும் உதார குணமும் எக்காலத்தும் அழியாதவை. 'கெட்டாலும் மேன் மக்கள் மேன்மக்களே' என்னும் அருமையான வாக்கியம் பரம்பரைக் குணத்தை நினைவுபடுத்தும்.

—டாக்டர் உ. வே. சாமிநாதய்யர்



# குமுதம்

**சுப்ரமணிய ராஜு**

டெலிபோன் மணி அடித்தது. சீதா புடவையைச் சரிசெய்து கொண்டாள். இன்று ஆபீஸில் வேலை அதிகம். நடு நடுவே வரும் டெலிபோன் தொல்லை வேறு.

''ஹலோ!''

''சீதாவா?''

''ஆமாம்.''

''நான்தான் சந்திரன். கொஞ்சம் இங்க வந்துட்டுப் போக முடியுமா?''

''சரி.''

முகம் உடனே மலர்ந்தது. களைப்பெல்லாம் சட்டெனப் பறந்து விட்டாற் போல இருந்தது. சந்திரன் என்கிற பெயர் மனசுக்குள் கொடுத்த தெம்பு. ஒரு முறை ஆபீஸ் முழுவதும் கண்களால் அளந்தாள். அத்தனைபேரும் மும்முரமாய்த் தங்கள் வேலையில் ஈடுபட்டிருந்தார்கள். இருநூறு பேரில் பாதிக்கு மேல் பெண்கள். காலையில் கணவனுக்குச் சமைத்துப் போட்டுவிட்டு, குழந்தைகளுக்கு ஊட்டிவிட்டு, பள்ளிக்கூடத்துக்கு அனுப்பிவிட்டு ஆபீஸுக்கு ஓடிவரும் பேசா மடந்தைகள்.

''என் பையனுக்கு வேலைக்குப் போற பொண்ணுதான் வேணுமாம்!''

''காலம் இருக்கிற இருப்பில் ரெண்டு பேரும் வேலைக்குப் போனாத்தான் குடும்பம் நடத்த முடியறது!''

சீதாவுக்குச் சட்டெனத் தன் புருஷன் ரகுவின் ஞாபகம் வந்தது. ரகு ஒரு பெரிய கம்பெனியில் சேல்ஸ் மானேஜர். ஆபீஸில் கார் கொடுத்து ஏராளமாய் சம்பளம் கொடுத்து, அது தவிர இதர செலவுகளையும் ஏற்றுக் கொண்டார்கள். இருந்தாலும் அவனுக்குச் சீதா வேலைக்குப் போக வேண்டும். நல்ல வேளை இன்னும் குழந்தை பிறக்கவில்லை. 'குழந்தை பிறந்தால் என்ன? அம்மா இருக்கா பாத்துக்க!'

கதவை லேசாகத் தட்டிவிட்டு சந்திரனின் அறைக்குள் நுழைந்தாள். அறை சுத்தமாய் இருந்தது. ஏதோ ஒரு வாசனை ரம்யமாய் இருந்தது. சுவர்களில் காலண்டர் இல்லை.



மேஜையில் ஃபைல்கள் சுத்தமாய் அடுக்கியிருந்தது. மற்ற அதிகாரிகள் போல் சந்திரன் குண்டூசியால் பல் குத்திக் கொண்டிருக்கவில்லை. சந்திரன் சிரித்தான். இன்றைய போதுக்கு இது போதும்.

"கூப்பிட்டீங்களா?"

"ஆமாம், இந்த எக்ஸ்போர்ட் அலொகேஷனைக் கொஞ்சம் பார்க்கணும். பார்த்துட்டுச் சரியா இருந்ததுன்னு டைப் அடிக்கக் குடுத்துடணும்."

"ஓகே சார்."

"வேற என்ன விஷயம்?"

"ஒண்ணுமில்லை."

"ஏன் இப்பல்லாம் ஒரு மாதிரியா இருக்கே சீதா?"

கதவைத் தட்டிவிட்டு பியூன் ராமசாமி உள்ளே நுழைந்தான்.

"ரெண்டு காப்பி கொண்டு வாப்பா!" என்றான்.

"இல்லை; எனக்கு வேண்டாம்" என்றாள் சீதா.

"பரவாயில்லை, கொண்டு வாப்பா!" என்று அவனை அனுப்பிவிட்டு மறுபடி அவளை உற்றுப் பார்த்தான்.

"சீதா! இன்னிக்குச் சாயங்காலம் உன்னோட கொஞ்சம் பேசணுமே!"

முடியாது என்று சொல்ல நினைத்தாள். ஆனால் மாலையில் ஏதாவது ஒரு ரெஸ்டாரண்டின் மங்கலான வெளிச்சத்தில் அவனருகே அவன் உடம்பில் பட்டும் படாமலும் உட்கார்ந்து கொண்டு அவன் சிரிப்பதைப் பார்த்துக் கொண்டே இருக்கலாம்....

காப்பி வந்தது. குடித்துவிட்டு விடை பெற்றுக் கொண்டாள்.

"சீதா! ஈவ்னிங் பார்க்கிறோம் இல்லையா?"

"ம்...."

மறுபடி சீட்டுக்கு வந்து உட்கார்ந்தாள். படபடப்பு அடங்கச் சிறிது நேரமாயிற்று. இது தப்பு இது தப்பு என்று தானே மனசுக்குள் சொல்லிக் கொள்வது போல இருந்தது. இதை இன்றோடு நிறுத்திவிட வேண்

டும் என்று ஒரு தீர்மானம் நிறைவேறி உடனே தளர்த்தப்பட்டது. எல்லா உறுதியும் சந்திரனைப் பார்க்கும் வரைதான். பார்த்தவுடன் எல்லா முடிச்சுகளும் அறுந்து போய் விடுகின்றன. பாவி! இப்படி ஆளை அசர அடிக்கிற மாதிரி பண்ணி விட்டானே! வெட்கத்தை மறந்து அவனைப் பற்றியேஎப்போதும் நினைக்க வைத்து விட்டானே?

கல்யாணம் ஆகித் தனக்கு இன்னும் முழுசாய் ஐந்து வருஷம் கூட ஆகவில்லை. அவனுக்கு இன்னும் கல்யாணமே ஆகவில்லை. ஒருகால் தன் திருமணத்துக்கு முன்னால் இவனைப் பார்த்திருந்தால் அப்பா அம்மாவிடம் அழுது அடம் பிடித்து இவனையே கல்யாணம் பண்ணிக் கொண்டிருந்திருப்போம். ஐந்தரை மணிக்கு ஆபீஸ் விட்டவுடன் இவன் காரிலேயே பீச்சுக்குப் போய் உட்கார்ந்து காற்று வாங்கிவிட்டு எதையாவது கொறித்துக் கொண்டு, சிரிக்கச் சிரிக்கப் பேசிக் கொண்டு....

ஆனால் ரகு அப்படி இல்லை. எப்போதும் சீரியஸான முகம். மாசத்தில் பாதி நாட்கள் வெளியூர். மீதி நாட்களில் கான்பரன்ஸ் மீட்டிங் என்று ராத்திரி பத்து மணிக்கு மேல் களைத்துப் போய் வருவான். அதிகம் பேச மாட்டான். 'சீதா அந்த அமிர்தாஞ்சனத்தை எடுத்துக் கொஞ்சம் தேய்ச்சு விடேன். தலையெல்லாம் ஒரே வலி.' — அடுத்த ஐந்தாவது நிமிடம் குறட்டை. என்றைக்காவது கொஞ்சம் சீக்கிரம் வந்து விட்டால் மாமியார், மாமனார் நாத்தனாரோடு விழுந்து விழுந்து பேச்சு. அப்படி என்னதான் பேசுவார்களோ? பேச்சின் நடுவே கொஞ்சம் கூட முகத்தைத் திருப்பாமல் 'சீதா எங்க நாலு பேருக்கும் ஸ்டிராங்கா ஒரு டோஸ் காப்பி கொண்டு வாயேன்!''

சந்திரன் இந்த ஆபீஸுக்கு வந்து இரண்டு வருஷம்தான் ஆகிறது. இவளை அவனுக்கு அஸிஸ்டெண்டாகப் போட்டார்கள். வந்த ஒரு வாரத்துக்குள்ளாகவே அவன் குணம் தெரிந்து போயிற்று. எந்தவித அலட்டலும் இல்லாமல் பிரச்னைகளை நிதானமாய் ஆராய்ந்து தீர்வு காணும் தெளிவு. எப்போதும் சிரித்துக்கொண்டே இருக்கும் முகம். யாரையும் கோபித்துக் கொள்ளாத தன்மை.

போன மாதம் ஆபீஸில் எல்லோரும் பிக்னிக் போனார்கள். செஞ்சி, சாத்தனூர், திருவண்ணாமலை என்று இரண்டு நாள் பிக்னிக். இவள் போகலாமா வேண்டாமா என்று யோசித்துக் கொண்டிருந்தாள். சந்திரன் வந்தால் போகலாம் என்று மனசுக்குள் ஒரு நப்பாசை. ஆனால் சந்திரன் வெளியூர் போய் விட்டு ஒரு நாள் முன்னதாகத்தான் வந்திருந்தான். இவளை அவன் கூப்பிட்டனுப்பி ஏதேதோ வேலைகள் கொடுத்துக் கொண்டிருந்தான். எப்படியோ உணவு இடைவேளையில் கொஞ்ச நேரம் கிடைத்தது. இவள் தான் பேச்சை ஆரம்பித்தாள்.

''ஆபீஸ்ல எல்லோரும்பிக்னிக்போறாங்க.''

''கேள்விப்பட்டேன்.''

''நான்கூடப்போகலாம்னு பார்க்கறேன்.''

''போங்களேன்....''

''இல்லே...வந்து....''

''ஏன், உங்க ஹஸ்பெண்ட் வேண்டாம்னு சொல்லுவாரா?''

''அவர் ஊர்லேயே இல்லே.''

''பின்னே?''

''நீங்க வரலியா?''

''வரலாம். கூடக் கம்பெனி யாரும் இல்லியே?''

''ஏன், நான் இருக்கேனே?''

''நீ பஸ்ல ஏறின உடனே லேடீஸ் கும்பலில் போய் உட்கார்ந்து விடுவே. எனக்கோ நம்ம ஆபீஸ்ல யார்கிட்டயும் அவ்வளவு பழக்கம் கிடையாது. பிக்னிக் முழுக்கக் கொட்டு கொட்டுன்னு நான் மட்டும் தனியா உட்கார்ந்துண்டு வரணும்.''

''அதுக்குன்னு நான் உங்க பக்கத்திலேயே வந்து ஒக்காந்துக்க முடியுமா என்ன? பாக்கறவங்கதான் என்ன நினைச்சுப்பாங்க?''

''யாரும் பார்க்காதபடி இருந்துட்டா?''

''அப்படின்னா?''

''மத்தவங்கள்ளாம் செஞ்சி, சாத்தனூர்னு போகட்டும். நாம வேற எங்கியாவது போவோம்!''

''வேற எங்கியாவதுன்னா?''

''மகாபலிபுரம்.''

''என்னது?''

''ம்! ஆபீஸ்ல பிக்னிக் போறோம்னு வீட்டுல சொல்லிட்டு வந்துடு. நாம மட்டும் தனியா மகாபலிபுரம் போயிட்டு வந்துடலாம்!''

முதலில் பயமாய் இருந்தது. உள்ளுக்குள் ஒரு நடுக்கம் வந்து கொண்டே இருந்தது. ஆனால் அன்று ராத்திரி முழுவதும் மனசு மகாபலிபுரக் கற்சிலைகளுக்கிடையில் சந்திரனோடு சுற்றிக் கொண்டிருந்தது. மறுநாள் காலை ஆபீசுக்குப் போய் அவனைப் பார்த்துச் சரி யென்று சொன்னவுடன்தான் அந்தக் கூச்சல் நின்றது. மகாபலிபுரத்தில் கரையோர மணலில் உட்கார்ந்து கொண்டு அவனோடு பேசிக் கொண்டிருந்தபோது எப்போது

---

## குளிரா ஏழைமையா?

இந்த ஆண்டில் மாஸ்கோவில கடுங் குளிராக இருக்கிறதாம். டெம்பரேச்சர் மைனஸ் இருபத்தி ஐந்து டிகிரிகளுக்கும் மேலாம். இவ்வளவிலும் அங்கு குளிரினால் சாவு என்ற செய்தி ஏதும் வரவில்லை.

ஆனால் வட இந்தியாவில் ப்ளஸ் டிகிரியில் இருக்கும்போதே பல பேர் கடுங் குளிரினால் செத்தார்கள் என்று செய்தி வருகிறது.

இதற்குக் காரணம், போதுமான குளிரைத் தாங்கக் கூடிய கம்பளி உடைகள் இல்லாததே. கம்பளிஉடைகள் இல்லாததற்குக் காரணம் இந்திய மக்களின் ஏழைமையே.

ஆகவே குளிரைக் குறை கூறுவானேன்?

''இந்திய ஏழ்மையினால் இன்னொரு சாவு'' என்று கூறலாமே!

—கே.ஏ. அப்பாஸ் மிர்ரரில் எழுதியது

தகவல்: ஸ்ரீமதி என். பங்கஜம்

அந்தப் பேச்சு முடிந்து அறைக்குத் திரும்புவோம் என்று மனசு அடித்துக் கொண்டது.

''என்னால் இனிமே உங்களை விட்டுட்டுத் தனியா இருக்க முடியுமான்னு பயமா இருக்கு சந்திரன்!''

''ஏன் சீதா?''

''வீட்டுக்குப் போனா மனசே இருப்புக் கொள்ளலே. படபடன்னு வருது. அவர் வேற எங்கியாவது கண்டு பிடிச்சுடப் போறாரோ, நாம ஏதாவது உளறிடப் போறோமோன்னு பயமா இருக்கு. வீட்லே இருக்கவே பிடிக்கலே. இப்படியே எங்கியாவது உங்களோட ஓடிப்போயிடலாமான்னு தோணறது.''

''ம்...''

''தினமும் காலம்பற எழுந்தவுடன் முதல் நினைப்பு உங்க நினைப்புத்தான். உங்களுக்காகவே குளிக்கிற மாதிரியும், உங்களுக்காகவே டிரஸ் பண்ணிக்கிற மாதிரியும். உங்களைப் பார்த்த உடனே இன்னிக்கு என்ன பேசலாம்னு மனசுக்குள்ள தெனம் ரிகர்சல் வேற!

''பேசாம எனக்குக் குமுதான்னு எங்க வீட்டுலே பேர் வச்சிருக்கலாம்.''

''ஏன்?''

''உங்க பேர் சந்திரன். சந்திரனைக் கண்டவுடன்தான் குமுதம் மலருமாமே?''

''ஏது நீகூட நாடகப் பாணியில எல்லாம் பேசறே?''

''அவ்வளவு தூரம் என்னைப் பைத்தியமாக்கி வெச்சுட்டீங்க!''

**ம**காபலிபுரம் போய் வந்து ஒரு மாதத்துக்கு மேல் ஆகிவிட்டது. மனசு வெட்கமில்லாமல் திரும்பத்திரும்ப அந்தராத்திரியையே நினைத்துக் கொண்டிருந்தது. ஒரு பத்து நாளைக்கு மிதக்கிறாற் போலவே இருந்தது. ஆனால் சந்திரன் அவள் தலை மேல் போட ஒரு பெரிய கல்லோடு வந்தான். ஊரில் அவனுக்கு அவன் வீட்டார் கல்யாணம் நிச்சயித்து விட்டார்களாம். அடுத்த மாதம் கல்யாணமாம். அவனுக்குக் கல்யாணம் என்றால் தான் ஏன் அவஸ்தைப்பட வேண்டும்?

ஆபீஸில் எல்லோருமே கிளம்பி விட்டார்கள். வேலை முடிய இன்னும் அரை மணி நேரம் ஆகும். இதை இன்றைக்கு முடித்து விட்டால் நாளையிலிருந்து நாலு நாட்கள் சேர்ந்தாற்போல் விடுமுறை. டெலிபோன் பஸ்ஸர் மணி ஒலித்தது.

''ஹலோ!'' என்றாள்.

''நான்தான் சந்திரன். கிளம்ப நேரமாகுமா?''

''ஆமாம்.''

''சரி, நான் வெயிட் பண்ணறேன்.''

''எதுக்கு?''

''என்ன, அதுக்குள்ள மறந்துட்டியா? இன்னிக்குச் சாயந்தரம் கொஞ்சம் வெளியிலப் போயிப் பேசலாம்னு சொன்னேனே?''

''வேண்டாம். இப்ப நான் உங்க ரூமுக்கு வரேன்.''

போனை வைத்துவிட்டு அவன் அறைக்குப் போனாள்.

அவன், ''சொல்லு!'' என்றான்.

> ### ஏழு பேருக்கு நன்றி!
>
> தமிழ்நாடு சட்டசபையில் 32 நாட்கள் நடைபெற்ற பட்ஜெட் தொடரில் ஏழு உறுப்பினர்கள் மட்டுமே முழுமையாக வருகை புரிந்திருக்கின்றார்கள். மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கை 234. இந்தத் தகவலை வெளியிட்ட சபாநாயகர் ராஜாராம் ஏழு உறுப்பினர்களின் பெயரை வெளியிடவில்லை.
>
> -அ. தங்கமுத்து

''சொல்றதுக்கு ஒண்ணும் இல்லே. இனிமே நாம பர்சனலாப் பேசறதைத் தவிர்க்கலாம்னு பார்த்தேன்.''

''ஏன்?''

''அப்படின்னு தோணித்து. அவ்வளவு தான்.''

''அதுதான் ஏன்னு கேக்கறேன்.''

''ஏன்னா, அதுதான்...''

''ஏன் நம்பளைப் பத்தி ஆபீஸ்ல யாராவது பேசினாங்களா?''

''இல்லே.''

''பின்னே?''

''உங்களுக்கு அடுத்த வாரம் கல்யாணம்.''

''அதனால?''

''அதனாலதான்.''

''ஓஹோ? அப்படின்னா நீ மட்டும் இத்தனை நாளா கல்யாணம் ஆனவளாத்தானே இருந்தே?''

''நீங்களும் அப்படி இருக்க வேண்டாமேன்னுதான்.''

''ஏன் இருக்க வேண்டாம்? காரணத்தைச் சொல்லு. எனக்குக் கல்யாணம் ஆன பிறகு நான் உன்னைப் பார்க்கக் கூடாது இல்லேயா?''

''அப்படி இல்லே.''

''பின்னே? அது என்னவோ ஒரு பேர் சொல்லுவியே, அது என்ன? ஆ! குமுதம்! நான் சந்திரன்னு நீ குமுதம். உடனே மலரும் அப்படி. இப்ப டின்னு ஏதோ சொல்லுவியே? இப்ப அதெல்லாம் பொய்யாகி டுத்தோ?''

''சந்திரன் எப்பவும் ஒண்ணுதான். குமுதம் நிறைய மலரலாம் இல்லேயா?''

''மறுபடியும் வசனமா?''

''வசனம் இல்லே. வாஸ்தவம்.''

''சரி; ஆல்ரைட். இனிமே நாம மறந்துடணும். அவ்வளவுதானே? உன்னால முடியறதா பார்ப்போம்.''

''என்னால முடியும்.''

''எப்படி?''

''நான் அடுத்த மாசத்திலேருந்து ஆபீஸுக்கு வரப்போறதில்லே.''

''ஏன்?''

''ராஜினமாப் பண்ணிட்டேன்.''

''என்னது? ரிசைன் பண்ணிட்டியா? உனக்கு என்ன பைத்தியமா?''

அவள் நிதானமாய்ப் பதில் சொன்னாள்.

''ஆமாம். நேத்து வரைக்கும்!''

# வாழ்வே வருக! வருகவே

கீரன்

ஒரு குறிப்பிட்ட வயது வரை புலன் இன்பங்களை அனுபவிக்கச் செய்து பின்னர் ஆன்மாவைப் பற்றியும் சிந்திக்க வைப்பவள், அன்னை பராசக்தி.

அவள் தாய் அனைவருக்கும்.

அதனால் இலக்கியம் அவளையும் பிள்ளையாக்கிக் கொஞ்சும் உரிமை பெற்றிருக்கிறது.

எல்லாம் வல்ல அத்தாயின் திவ்ய சொரூபம் மனக் கண்ணில் தோன்றும்போதே ஒரு வகைப் பேரின்பத்தின் சாயல் தெரிகிறது.

எல்லாம் வல்ல உமையம்மையின் பச்சை நிறத் திருமேனியிலிருந்து வீசும் பச்சை நிற ஒளியில் பல அண்டங்களும், அண்டங்களில் உள்ள உயர்திணை அஃறிணை உயிர்களும் மூழ்கிக் கிடப்பது பச்சைச் சேற்றில் இப் பிரபஞ்சமே மூழ்கிக் கிடக்கிறது என எண்ணத் தோன்றுகிறது.

எவரையும் வெல்லும் மன்மதனையும் வென்ற சிவபிரானையும் அஞ்சவென்ற நாயகியின் வாய் செஞ்சொல் மணந்ததால் சிவந்த திருவாய்; சந்திரனுக்குச் சூரியனிடமிருந்து ஒளி என்றால் சூரியனுக்கு ஒளி தருவது அம்பிகை திருமுகம்.

திருப்பாற்கடலில் எழுந்த நஞ்சை உண்ட காலத்தில் இறைவன் கழுத்து கருத்தது போல் வாய் உதடு கருக்காமைக்குக் காரணம் அம்மை வாயமுது ஊட்டியதுதான்.

ஆகவே அவனன்றி ஓரணுவும் அசையாது என்ற உண்மையை அசையாது வைத்திருப்பவள் அவள்.

''அந்த அம்மையின் திருவடிகள்தான் என்ன அழகு? செந்தாமரை மலரின் உள்ளிதழ், மாமரத்தின் வசந்தத்தளிர், அசோகு மரத்தின் இலை, செம்பஞ்சுக் குழம்பு ஆகியவை அம்மையின் திருவடிக்குத் தோற்றுவிட்டவை. அவற்றினும் மென்மை அம்மையின் திருவடி. அது என் இதயத்தில் வந்து தங்கியது.'' என்று ஒருவர் பாடினார்.



சென்ற இதழிலும் இந்த இதழிலும் 'பத்திரிகைகளின் பெயர்களைத் தலைப்பாகக் கொண்டு கதைகள் எழுதலாம்' என்ற யோசனையை வெளியிட்டு எழுத்தாளர்களுடன் தொடர்புகொண்டு கதைகளைப் பெற்றுத் தந்தவர்:

**மாலன்**

இப்படிப் பாடியவுடன் அவருக்கு ஒரு சந்தேகம் வந்து விட்டது. யாரும் இக் கருத்தை ஏற்கமாட்டார்களே என்று. ஏன்? இவ்வளவு மென்மையான திருவடி இதயத்தில் எப்படித் தங்கும்? இதயம்தான் கல்லை விடக் கடினமாயிற்றே? அம்பாள் திருவடிக்கு வலிக்காதா? என்றெல்லாம் சந்தேகங்களை எழுப்புவார்களே! அருணகிரியாரும் முருகனை நோக்கிப் பாடும்போது கல் போன்ற என் இதயத்தின் மீது தாமரைப் பூப்போன்ற உன் திருவடி எப்படி மலரும்? என்று கேட்டாரே!

''தினியான மனோசிலை மீதுனதாள்
அணியார் அரவிந்தம் அரும்புமதோ?''

இவை அந்த ஆசிரியருக்கு ஏற்பட்ட சந்தேகங்கள்,

அவருக்கா விடை தோன்றாது?

அவர் சொல்கிறார்.

''என் இதயம் கருங்கல்லை விடக் கடினமானதுதான்; அம்பாள் திருவடியும் நான் சொல்லியபடி மென்மைதான். அது என் இதயத்தில் வந்து தங்கியதும் உண்மைதான். அம்மைக்கு வலிக்கவில்லையா என்றால் இல்லை. எப்படி?

எல்லாம் வல்ல பிரானை என் அம்மை திருமணம் செய்து கொண்டான் அல்லவா? நாரணன் முன்னிற்ப, நயம்பெறு கணநாதர் முனிவர், 'அர அர'' ஒலி செய்து வாழ்த்திசைப்ப அம்மை கைப்பற்றிய காலத்தில் அம்மியில் கால் வைத்தாளே! அந்தப் பழக்கத்தால் அக்கல் போன்ற என் இதயத்திலும் கால் வைத்தாள்'' என்றார் அப்பெரும் புலவர் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளைவாள் அவர்கள்.

வால்குடி என்று அழைக்கப்படும் திருத்தவத் துறை வாழ் ஸ்ரீமதித் தாயார் மேல் பிள்ளைவாள் பாடிய பெருந்திரப் பிராட்டி பிள்ளைத் தமிழ்:

''செந்தா மரைமேல் இதழ் மருட்டித்
தேமா நறுந்தண் தளிர் வருத்திச்
செயலைமலர் நல்நலம் கவற்றிச்
செழும்பஞ்சினையும் விளரியற்றி
அந்தார் புனையும் உழுவல் அன்பர்க்கு
அழியா இன்பமளித்து மண
அம்மியிடத்தும் பயின்றதனால்
அடியேன் மனத்துக் குடியிருந்த
பைந்தாள் பெயர்த்து மேகலையும்
பாதசாலங்களும் ஒலிப்பப்
பவளவாய்ப் புன்னகை யரும்பப்
பயில்மாலையில் முன்றில்கள் தோறும்
மந்தா நிலஞ்சேர் தவத்துறையில்
வாழ்வே! வருக! வருகவே!
வான்தோய் குடுமிவரை மூலைத்த
மருந்தே வருக வருகவே!

# கமலாவின் கமெண்ட்ஸ்



**எ**ன் அம்மாவிடமிருந்து கடிதம் வந்தாலே எனக்கு அலர்ஜி. அம்மாவின் கடிதத்தை நான் உரக்கப் படிக்க வேண்டும். இது என் மனைவி கமலாவின் கட்டளை.

ஒரு நாள் நடந்ததைக் கேளுங்கள்:

''கமலா, அம்மாவிடமிருந்து லெட்டர்'' என்றேன். ''இப்படிக் கொடுங்கோ... பாவம் இந்த அம்மா எதுக்கு சாளேசுரக் கண்ணோடு லெட்டர் எழுதறுளோ...'' என்று அவள் கூறும்போதே இடைமறித்து, ''உங்கம்மா இல்லே... எங்கம்மாவின் லெட்டர்'' என்றேன். ''அதை முதல்லேயே சொல்லக்கூடாது? ஹூம் படியுங்கோ. ஆயிரம் கைநடுக்கல் இருந்தாலும் கரெக்டா வாரா வாரம் லெட்டர் எழுதிடுவா உங்கம்மா... எவ்வளவு பணம் வேணுமாம்? இங்கே பிள்ளை இல்லா வீடு... படியுங்கோ....'' என்றுள்.

''அன்புள்ள கடுகுவிற்கு ஆசீர்வாதம். நீ சௌக்கியமா?...''

கமலாவின் கமெண்ட்: ''பிள்ளை சௌக்கியமான்னுதான் கேட்கிறுள். நான் ஒருத்தி இருக்கேன்னு நினைவு இருக்கணுமே! தான், தன் பிள்ளை, தன் பேரன், தன் பேத்தி எல்லாரும் சௌக்கியமா இருந்தால் போதும். ஆயிரம் இருந்தாலும் நான் அசல்தானே... ஹூம் (இனி கமலாவின் கமெண்டுகளை அடைப்புக் குறியில் கொடுக்கிறேன்.)

''....கமலா சௌக்கியமா?'' (அதிசயமா இருக்கே?... கைதவறி எழுதிட்டாளா?)

''நீ வாங்கி அனுப்பிய கம்பளி ஷால் நன்றாக இருக்கிறது.''

(இருக்காதா என்ன? மாசா மாசம் அம்மாவுக்கு மணியார்டர் பண்ணது போதாதுன்னு போனஸ் மாதிரி இப்படி ஏதாவது சாமான் அனுப்பிறு நல்லா இல்லாம எப்படி இருக்கும்?)

''.....உன் கம்பளியை உபயோகித்துக் கொண்டு வருகிறேன்....''

(அட அநியாயமே ஃப்ரீயாக வந்ததுன்னு இந்தக் கத்தரி வெய்யிலிலுமா கம்பளியைப் போர்த்திண்டு இருப்பா?)

''கம்பளியைப் பார்க்கறவங்க எல்லாரும் ரொம்ப உசத்தியா இருக்கேன்னு சொல்ரு''

(நாத்து எழுபத்தி அஞ்சு ருபாய் கொடுத்தால் எப்படி இருக்குமாம்?)

''...இவ்வளவு நைஸா இருக்கே நான் பட உழைக்குமான்னும் கேட்கரு....''

(நான்பட உழைக்கணும்னு. ஆயுசுக்கும் உழைக்கணும்னு கோணியிலேதான் ஷால் பண்ணணும். நாருக்காவெச்சுண்டாளெல்லாம் உழைக்கும். பேரன் பேத்திங்க சரியான பிசாசுங்க. அதுங்க இழை இழையாப் பிய்ச்சுடுமே! அதுங்க இருக்கிற இடத்திலேயே ஷாலைக் கொண்டு வரக் கூடாது.)


## தாளிப்பு: கடுகு


''...எதிர் வீட்டு காமு மாமி கூட இதே மாதிரி ஒண்ணு வேணும்னு எழுதச் சொன்ளுள். பணம் கொடுத்திடருளாம்...''

(அதுதானே கேட்டேன். காமுவுக்கு சரோஜாவுக்கு மைதிலிக்கு பத்மாவுக்கு ருக்மணிக்கு என்று இனிமேல் ஆர்டர் குவியும்.... பணம் கொடுத்திடருளாம். ஆஹ்ஹா ஹா! ஷாலே நீங்கவாங்கி அனுப்பிறு அங்கே பணம் கொடுத்திடுவா. ஆனல் பணம் நம்ப கைக்கு வராதே. இது ஜக்க போனஸ், உங்கம்மாவுக்கு.... நூதன ஸ்டைல் இப்படித்தான் டூஜன் கணக்கிலே அனுப்பினீங்க... பணம் அங்கே. கடன் இங்கே).

''என் அக்கா பேத்தி ஜானுவுக்கு வருகிற வாரம் கல்யாணம். உனக்கு இன்விடேஷன் அனுப்பி இருக்கிறுள்... என்ன ஆசீர்வாதம் செய்யலாம்னு தெரியலே....''

(எப்படித் தெரியும்? நீ எவ்வளவு பணம் அனுப்பறே, ஆசீர்வாதம் பண்ண என்று நேரடியாகக் கேட்கிறதுதானே... 'எனக்கெதுக்கு வங்கி ஒட்டியாணம்'னு சொல்லித் தன் பொண்வயத்துப் பேத்திக்குக் கொடுத்த போது உங்கம்மாகேட்டாளா? ஏன், எனக்குக் கொடுத்தால் அழிச்சி வளையல் பண்ணிப் போட்டுக் கொள்ள மாட்டேனு... முப்பது வருஷம் ஆனலும், இதெல்லாம் மறக்குமா?)

''...உன் உடம்பைப் பாத்துக்கோ...''

இதற்குக் கமலா அடித்த கமெண்ட் ஒரு வாக்கு வாதத்தைத் துவக்கியதால்; கடிதம் மேலே படிக்கப்படவில்லை.

புரிந்ததா, ஏன் என் அம்மாவின் கடிதம் என்றுலே எனக்கு அலர்ஜி என்று?


Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543)

Assistant Editor: P.S. Mani Layout Artist: Nambi Editor: K. Rajendran




புதிய மேன்மையான 'கீ' யில் – அதிக வெண்மையும் பளபளப்பும் காண்பீர்.

